உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி—உசு.] பிரபவஹு மாசிமீ [பகுதி—ச.
Vol. XXVI. February-March-1928. No. 4.

## கவியின்பம்.

கவியின்பமாவது:—கவியிலுள்ள சொல்லும் பொருளுங் காரணமாகத் தோன்றும் இன்பம். கவி—செய்யுள். அவ்வின்பந் தரவல்லன செஞ்சொற்களாலாய கவிகளேயாம். அதுபற்றியே கம்பரும், "செஞ்சொற்கவியின்பம்" என்றார். செஞ்சொல்லாவது:—வழுவில் சொல், இன்பந்தரும்பொருளமைந்தசொல், கருதியபொருளைவிளக்குஞ் சொல், ஆழ்ந்தபொருளையுடைத்தாயசொல், செவிக் கின்பம்பயக்குஞ் சொல் ஆகிய இவைகளேயாம். வழுவில்சொல்—இலக்கணவரம்புடைய சொல்.

திருமுருகாற்றுப்படையென்னும் நூலினுள்,

"உலகமுவப்பவலனேர்புதிரிதருஉம்
பலர்புகழ்ஞாயிறுகடற்கண்டா அங்கு"

என்னும் முதலடியிரண்டன்கண்ணும்வைத்து இச்செஞ்சொற்களினியல்பை ஆராய்ந்துகாட்டுதும். உலகம், உவப்ப, வலன், ஏர்பு, திரிதருஉம், பலர், புகழ், ஞாயிறு, கடல், கண்டா அங்குஎன்னுஞ்சொற்கள் யாவும் வழுவின்மையின் இலக்கணவரம்புடையனவேயாம். உலகம் முதலிய அச்சொற்கள் ஒவ்வொன்றுமின்பந்தரும் பொருளமைந்தவாயினும், தொடர்ப்பொருளைநோக்குமிடத்து உவப்ப, ஏர்பு, திரிதருஉம்,

பலர் என்பன அவற்றுள்ளு மின்பந்தருவனவேயாம். உவப்ப என்பது திரிதரூஉம் என்பதோடு முடிந்து ஞாயிற்றின்றோற்றம் சீவராசிக ளுடையமகிழ்வுக்குக் காரணமாதலையும், திரிதரூஉம் என்பது ஞாயி றோடுமுடிந்து முக்காலத்தினு மொத்தியல்பொருள் என்பதனையும் விளக்கிநிற்றலின் உவப்பமுதலியன கருதியபொருளை விளக்கிநிற்குஞ் சொற்களேயாம். மற்றைப்பொருள்கள்போலச் சிலரான்மாத்திரம் புகழப்படுதலின்றி எல்லாரானும் புகழப்படும் ஞாயிறு என்றும், பல சமயத்தாரானும் புகழப்படும் ஞாயிறு என்றும், கவிகள்பலரானும் புகழப்படும் ஞாயிறு என்றும் பொருள்கொள்ளநிற்றலின் பலரென்பது ஆழ்ந்தபொருளை உணர்த்துஞ்சொல்லேயாம். பலர் என்பது ஈண்டு முதற்கூறியபொருளின்கண் சிலர் என்னும் சொற்கு எதிரியதாகாது யாவருமென்னும்பொருட்டாய்நின்றது. ஞாயிறு யாவரானும் புகழப் படுதலை, "தயங்குதிரைப் பெருங்கடல் உலகுதொழத் தோன்றி—வயங்கு கதிர் விரிந்த உருகெழு மண்டிலம்" (அகநா—263) எனவும், "உலகு தொழுமண்டிலம்" (சிலப். 14-4) எனவும் வருவனவற்று னறிக. இரண்டாவதாகக்கூறிய பலசமயத்தாரானும் புகழப்படும் ஞாயிறு என்ற பொருளானே முருகன் பிறதேவர்களாலே நீக்கற்கரிய அகவிருளைத் தன் ஞானவொளியானே நீக்கி வீடளித்தலிற் பலரும் புகழ்தற்கேற்ற தெய்வத்தன்மையுடையவன் என்பதும், கொள்ளப்படுமாதலானும் பலர் என்பது ஆழ்ந்தபொருளதாதல் காண்க. உலகம்முதலியசொற்களெல் லாம் ஓதுங்காற் செவிக்கின்பம் தருதலின் இன்பந்தருஞ் சொற்களே யாம். இவ்வாறே இதனகத்துவரும் ஏனையவடிகளையும் மற்றுங் கவி களையும் நோக்கி யுணர்ந்துகொள்க.

இனிச் செஞ்சொலென்பதற்குச் செவ்வியசொற்களாலாய தொடர் கள் எனப் பொருள்கொண்டு கவிக்கு அடையாக்கிப் பத்தழகும்பயக்கும் கவியெனினு மாம். செஞ்சொற்கவியெனத் தாம் சுருங்கச்சொன்னதைக் கம்பர் "செவ்விய மதுரஞ்சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய தீஞ் சொல்—வவ்வியகவி" என விளங்கவைப்பர். இங்ஙனங்கூற விவரியல்பு. கவிகளிலே சொல்லின்பமும் பொருளின்பமுமாகிய இரண்டும் தனித் தனியும் ஒருங்கும் அமைந்துகிடக்கும். ஒருங்குஅமைந்ததே மிக இன்பந்தருங்கவியாம்.

இராமாவதாரத்திலே,

"முத்தமிழ்த்துறையின்முறைபோகிய
வுத்தமக்கவிகட்கொன்றுணர்த்துவன்
பித்தர்சொன்னவும்பேதையர்சொன்னவும்
பத்தர்சொன்னவும்பன்னப்பெறுபவோ"

என்னு மிச்செய்யுளுள்வரும் சொற்களெல்லாம் முற்கூறிய இரண்டின்ப மும் ஒருங்கமைந்துகிடத்தல் மிகவும் வியக்கத்தக்கதாயினும், அவற் றுள்ளும் முறைபோகிய உத்தமக்கவிகள் என்பனவும் பன்ன என்பதும் நுணுகிநோக்குவோர்க்கு மிக இன்பந்தருவனவேயாம்.

இன்னும்,

"ஒன்றேயென்னினொன்றேயாம்பலவேயென்னிற்பலவேயாம்
அன்றேயென்னினன்றேயாமாமேயென்னினுமேயாம்
இன்றேயென்னினின்றேயாமுளதேயென்னினுளதேயாம்
நன்றேநம்பிகுடிவாழ்க்கைநமக்கிங்கென்னேபிழைப்பம்மா"

என்னும் இச்செய்யுள் சுருங்கச்சொல்லன் முதலிய பத்தழகோடும் கூடி யின்பந்தருமாற்றை யார்தாம் வியவார். இதனுள் 'நன்றே நம்பி குடி வாழ்க்கை நமக்கிங் கென்னே பிழைப்பம்மா' என்னும் அடியை நோக்க நோக்க எத்துணை இன்பம் அளிக்கின்றது. அவ்வடியை நோக்கும் போது இவ்வாறியற்றும் தெய்வப்புலவன் பிறனும் உளனோவென்னும் எண்ணம் உண்டாகின்றது.

இன்னும்,

"படைப்புப்பலபடைத்துப்பலரோடுண்ணு
முடைப்பெருஞ்செல்வராயினுமிடைப்படக்
குறுகுறுநடந்துசிறுகைநீட்டி
யிட்டுந்தொட்டுங்கௌவியுந்துழந்து
நெய்யுடையடிசின்மெய்ப்படவிதிர்த்து
மயக்குறுமக்களையில்லோர்
பயக்குறையில்லைதாம்வாழுநாளே"

இச்செய்யுளில் ஒருகுழந்தை தந்தையுண்ணும்போது அங்கேவரு மாற்றையும் வந்து அவனுண்ணும் சோற்றைச் சிறியகையைநீட்டி

அள்ளியிடுதல் முதலியவற்றைச்செய்யு மியல்புகளையும் நாம் கண்ணுற் கண்டதுபோல அமைத்திருப்பது எவர்க்குத்தான் இன்பந்தராது.

இன்னும்,

"நின்ற சொல்லர் நீடுதோன்றினியர்
என்றுமென்றோள்பிரிபறியலரே
தாமரைத்தண்டாதூதிமீமிசைச்
சாந்திற்றொடுத்ததீந்தேன்போலப்
புரையமன்றபுரையோர்கேண்மை
நீரின்றமையாவுலகம்போலத்
தம்மின்றமையாநந்நயந்தருளி
நறுநுதல்பசத்தலஞ்சிச்
சிறுமையுறுபவேசெய்பறியலரே"

என்னும் இந்நற்றிணைச்செய்யுளில், தவறுத வாய்மையையும் பிரியா தின்பஞ்செய்தலையும் உடையனுதலை 'நின்றசொல்லர் நீடு தோன்றினியா' என்னும் சொற்றொடர்களால் அமைத்திருக்குமாறும் இருவர்கருத்து மொத்தவழித் தலைவன் தலைவிபால் அன்புவைத்தமை தோன்றத் 'தாமரைத் தண்டா தூதி மீமிசைச்—சாந்திற் றொடுத்த தீந் தேன் போலப்—புரைய மன்ற புரையோர் கேண்மை' என அமைத்த வாறும் பிறவும் நோக்குங்கால் இருவகையின்பையும் எத்துணையாக அளிக்கின்றன. இங்ஙனமே சங்கச்சான்றோர்கவிகளும் பிற்றைச் சான்றோர்கவிகளும் இவ்விருவகையின்பமும் தருமாற்றை ஓர்ந்துணர்ந்து கொள்க.

ஈண்டு யாம் சொல்லின்பமென்றது தொடையின்பம்முதலிய வற்றையன்று; சொல்லின்கணமைந்திருப்பனவாக முற்கூறிய வழுவின்மைமுதலியவற்றான்வரு மின்பத்தை.

இனி, இவ்விருவகையின்பத்தோடு இசையின்பமும் பாக்களுக்கு இன்பந்தருவனவேயாம். அதுபற்றியே,—கம்பரும் விருத்தப்பாக்களைப் பற்பல இசையுறவமைத்தனர். கம்பர்கவிகளிலே இசையின்பந்தருவன,

"பாகொக்குஞ்சொற்பைங்கிளியோடும்பலபேசி
மாகத்தும்பர்மங்கையர்நாணமலர்கொய்யும்
தோகைக்கொம்பினன்னவர்க்கன்னநடைதோற்றுப்
போகக்கண்டுவெண்டினமார்க்கும்பொழில்கண்டார்"

என்பது போலப் பலவுள. அவற்றையெல்லாம் நோக்கியுணர்க.

வில்லிபுத்தூராரும்,

"பரதநாதவேதபாரத்துவாசனென்பான்
விரதவேள்விதன்னின்மேனகையாலான
சுரததாதுவீழ்ந்ததுரோணகும்பந்தன்னில்
வரதனொருவன்வந்தான்வசிட்டமுனியையொப்பான்"

என்பதுபோலப் பற்பலசந்தங் காட்டுவர். இவையெல்லாம் வடநூற் சந்தப்பாவைநோக்கியெழுந்தனவேயாம்.

இனிக் கவிகள் உலகப்பொருள்களுள் ஒவ்வொன்றையெடுத்துக் கொண்டு அதனியல்புகளைப் புனைந்துரைத்தலும் (வருணித்தலும்) மிக இன்பந்தருவதேயாம். அவ்வின்பத்தை யாம் நுகரவேண்டுமேல், அப்புனைந்துரைமுழுவதையும் ஒருசேரநோக்கி நுகர்தல்வேண்டும். கம்பர் கார் என்னும் காலப்பொருளை எடுத்துக்கொண்டு அப்பொருளியல்பை அதனோடுசம்பந்தமுற்ற நிலத்திணை இயங்குதிணைப்பொருள்களினியல்பால் விளக்கிப் புனைந்துரைத்தல் மிக இன்பந்தருகின்றது.

கார்காலம் ஆவணித்திங்களும் புரட்டாதித்திங்களுமாம். கார்காலம்—மழைக்காலம். ஆவணித்திங்களின்முதலிலே பெரும்பாலும் மழை தொடங்கும். முதன்மழையைக் கவிஞர் தலைப்பெயல் என்பர். தலைப்பெயல் தொடங்கும்போது மேகங்கள் தனித்தனியே ஆகாயத்தில் வந்துகூடிச் சிறிதுசிறிதாக இருளுமியல்பையும் பின் மின்னுமாற்றையும், பின் முழக்கஞ்செய்புமியல்பையும், பின் சிறிதே வாதைவீசுமியல்பையும், பின் நாற்றிசையும் பெருமின்னல்கள் உண்டாமாற்றையும் நிரலே கூறிய வியல்பு எவ்வளவு அற்புதமாக இருக்கின்றது.

இனி, அவ்விருள்முதலியவற்றைப் புனைந்துரைக்குங்கால் விண்ணின் இருளுண்டாக அவ்விருளின் சுற்றிடமெல்லாம் வெளியிடமாக ஞாயிற்

றின்கதிர்கள் ஒளிகுறைந்து மேகங்களிலே பரக்க அவ்விருள் விளங்குந் தோற்றத்திற்குத் தன்கண் நஞ்சையுடைத்தாய்ச் சுற்றிடமெல்லாம் வெளியாய்த் தன் செவ்வொளி நஞ்சின்மேற் சிறிது பரக்கப்பெற்றதாய் விளங்கும் கண்ணுதல்கண்டத்தை உவமையாக எடுத்து,

"நண்ணுதலருங்கடனஞ்சநுங்கிய
கண்ணுதல்கண்டத்தின்காட்சிகாணலாய்
விண்ணகமிருண்டதுவெயிலின்வெங்கதிர்
தண்ணியமெலிந்தனதழைத்தமேகமே" (ங)

எனக் கூறியதூஉம், பின் எங்குங் கறுத்துப் பெரிதும் இருண்ட கரு நிறத்திற்கு,

"வஞ்சனை அரக்கர்தம்வடிவிற்செய்கையில்
நெஞ்சினுமிருண்டதுநீலவானமே" (ச)

எனக் கூறியதூஉம், பின் நன்கு இருண்ட மேகங்களினிடையே மின்னல் தோன்றுவனவற்றிற்குப் போரிலே வந்து எதிர்த்த யானைகளின் கரியமேனியிலே வீரர்கள் வாளாற் குற்றுந்தோறும் புண்தோன்றுதலை உவமையாக எடுத்து,

"நாட்களினளிர்கடனூரநாவுற
வேட்கையிற்பருகியமேகமின்னுவ
வாட்கைகண்மயங்கியசெருவின்வார்மதப்
பூட்கைகணிறைந்தபுண்டிறப்பபோன்றவே" (ரு)

எனக்கூறியதூஉம், பின் வானிற்றோன்றிய முழக்கத்திற்குக் கடலைவாரி வானின்மேல் நிரைத்துவிட அது முழங்கியதுபோலும் என அதனை உவமையாக்கிச்,

"..................................சூழ்திரை
மாநிறநெடுங்கடல்வாரிமூரிவான்
மேனிரைத்துளதெனமுழக்கமிக்கதே" (சு)

எனக் கூறியதூஉம், பின் நான்குதிக்குகளினும் ஒன்றோடொன்று சேர்ந்து மின்னும் மின்னற்றொடர்களைத் தற்குறிப்பேற்றமாக்கித் திக்குகள் சிரிப்பனபோன்ற எனக்கூறியதூஉம், பின், தோன்றி மறையும்

மின்னலுக்குத் திருத்தியினல் ஊதுந்தோறும் தோன்றிமறையும் உலைமுகத் தக்கினிச்சுவாலையை உவமையாக்கி "ஊதுவெங்கனலுமி ழுலையுமொத்ததே" எனக்கூறியதூஉம், மேலெழுந்து மின்னும் பெரு மின்னல்களைத் தற்குறிப்பேற்றமாக்கி, 'இரவியின்கதிர்'—அரிந்தனவா மெனவசனிநாவென—விரிந்தன திசைதொறு மிசையின் மின்னெலாம்" எனக் கூறியதூஉம், பின் பூமியைநோக்கிவரும் மின்னல்களுக்கு உறை கழித்த வாளையும், திக்கியானைகளி னேடைகள் இடைவிட்டுவிளங்குவன வற்றையும் உவமையாக்கி,

"சூடினமணிமுடித் துகளின்விஞ்சையர்
கூடுறைநீக்கியகுருதிவாட்களு
மாடவர்பெயர்தொறுமாசையானையி
னேடைகளொளிபிறழ்வனவுமொத்ததே" (க0)

எனக்கூறியதூஉம் மிக இன்பந்தருவனவேயாம்.

[மேற்காட்டிய மூன்றுஞ்செய்யுளிற் கண்டத்தின்காட்சிகாணற்கு விண்ணகமிருளலும் வெயிலின்வெங்கதிர் மெலிதலும் ஏதுவாய்நின்ற தெனக்கொள்க.]

இனி, மழைபெய்யத்தொடங்குமுன் எதிரெதிராக மின்னலுண் டாதலும், குளிர்காற்று அதிகப்படுதலும், அது எங்கும் பரத்தலும், பின் வாடையெழுதலும், அதனல் நிலத்திலே துகளெழுதலும், பின் மின்னி மழைபெய்தலு மியல்பு; அவ்வியல்பை நாம் காணச் செய்யுள் நடையில் நிரலேயமைத்திருப்பதும் மிக இன்பந்தரத்தக்கது.

மழைபெய்யத்தொடங்குமுன் எட்டுத்திசைகளினுந் தோன்றும் மின்னல்களை, நாகங்களெட்டும் திசைகளெட்டையும் நண்ணி நாவளைத் தாற்போலுமெனவும், பொங்கிய ஊதையைக் காசினியுயிர்ப்பெனவும் தற்குறிப்பேற்றமாக்கி,

"எண்வகைநாகங்கடிசைகளெட்டையு
நண்ணினநாவளைத்தனையமின்னகக்
கண்ணன்மெய்வடிவெனக்கருதிக்கார்விசும்
புண்ணிறையுயிர்ப்பெனவூதைபொங்கவே" (கக)

எனக்கூறியதூஉம், அவ்வூதை மேலுங் கீழுமாக நிலையின்றி வீசியதற்கு வேசியாது நிலையில்லாமனத்தை உவமையாக்கித்,

"தலைமையுங்கீழ்மையும் தவிர் தலின்றியே
மலையினுமாத்தினுமற்றுமுற்றினும்
விலைநினைந்துளவழிவிலங்கும்வேசையர்
உலைவுறுமனமெனவுலாயதூதையே" (கஉ)

எனக்கூறியதூஉம், வாடையைப் பேயாகக் குறித்து அதனை வாளாகூறாது நாயகரைப் பிரிந்த மகளிரது முலைகளை அரிந்து உண்ணவந்த பேயாக்கி,

"அழுங்குறுமகளிர் தமன்பர்த்தீர்ந்தவர்
புழுங்குறுபுணர்முலைகொதிப்பப்புக்குலாய்க்
கொழுங்குறைத்தசையெனவீர்ந்துகொண்டது
விழுங்குறுபேயெனவாடைவீங்கிற்றே" (கங)

எனக்கூறியதூஉம், மழைபெய்யும்போது அதுபெய்தற்கிடமாகிய ஆகாயத்தைப் போர்ப்பெருங்களமாக உவமையாக்கி அதற்கு ஏதுவாகத் தூகள் விசும்பை மறைத்தலையும், மின் வாள்போல மின்னுதலையும், மேகம் முரசுபோல முழங்குதலையும் ஏதுவாக்கி,

"ஆர்த்தெழுதுகள்விசும்படைத்தலானுமின்
கூர்த்தெழுவாளெனப்பிறழ்ங்கொட்பினும்
தார்ப்பெரும்பணையின்விண்டழங்குதாவினும்
போர்ப்பெருங்களமெனப்பொலிந்ததும்பரே" (கச)

எனக்கூறியதூஉம், போர்க்களமாக உருவகஞ்செய்ததற்கேற்ப மழைத்தாரைகள் விழுவதை அம்பாக உவமித்து அதனை வாளாகூறாது, "இன்னகைச்சனகியைப்பிரிந்தவேந்தன்மேல்—மன்மதன் மலர்க்கணை வழங்கினனென" எனக்கூறியதூஉம் மிக வியக்கத்தக்கனவேயாம்.

இனி, மழைபெய்புங்கால் மேகங்கள் முதலிற் பெருந்துளிகளை நிலத்தில் உறைக்க வீழுமாறு அங்கங்கே சொரியும்; பின் அத்துளிகளை ஒன்றோடொன்று நெருங்கச்சொரியும்; பின் சோனையாகச் சொரியும்;

இடையிடையே மின்னும்; முழங்கும்; ஒன்று முழங்கிமுடியப் பின்னொன்று முழங்கும்; முழங்கி ஒன்று பெய்துமுடிய மற்றது பெய்யும்; பின் காற்று மாறிமாறி வீச அதனாற் சிதறுற்றுச் சிறுதுளிக்ளாக நாற்றிசையி னின்றும்வந்து வீழும். இப்படி மழைபெய்யுமியல்பைக் கம்பர் நிரலே யமைத்துப் புனைந்துரைத்தகவிகளை நாம் நோக்கும்போது மழைபெய்யுமியல்பை நேரே நாம் காண்கின்றவராகின்றேம். இங்ஙனங் கூறுஞ் சித்திரமே கம்பன்கவிச்சித்திரமெனப்படும்.

இனி, அக்காலத்தோடு சம்பந்தமுடையனவும் இல்லாதனவுமாகிய நிலைத்திணை இயங்குதிணைப்பொருள்கள் அக்காலத்தால் எய்து மியல்பைப் புனைந்துரைக்குமுகத்தானே அக்காலவியல்பை நாங் கண்ணுற் காணக் காட்டுஞ் செயல்வன்மையையு மிங்கே காட்டுதும்.

அவர்காட்டுமொருவது:—தலைப்பெயன்முடிந்தவுடனே, அத்தலைப் பெயலாற் பாதிரிமரங்களெல்லாம் பூவாதொழிந்தன; ஞாயிறு பசந்தது; வெண்காந்தள் பெருமைகூர்ந்தன; குவளைகள் சிறுமைகூர்ந்தன; மயில்கள் களிப்புற்று ஆடின; குயில்கள் களிப்பற்று வாய்மூடின; செங்காந்தட் பூக்கள் தேன்சொரிய மலர்ந்து மலைச்சாரல்களிலே சாய்ந்துகிடந்தன; வெண்காந்தட்கொடிகள் பாம்பின் தலைகள்போலத் தந்தலைகள் தோன்ற ஒன்றேடொன்று பின்னிக்கொண்டு தழைத்த தந் தலைச்சுமை பொறுக்கமுடியாமற் குழைந்து சாய்ந்துகிடந்தன; இந்திரகோபங்கள் எள்ளிட இடமின்றி எங்கும் பரந்தன; வேங்கைகள் அலர்ந்தன; கொன்றைகள் மலர்ந்தன; கருவிளை பூத்தன; கூதாளம் விரிந்தன; குவளைகள் குவிந்தன; காடுகள் தழைத்தன; முல்லைகள் அரும்பின; அருவிகள் பொன்னைச்சொரிந்தன; தாமரைகள் தமக்கிடமாகியகுளங்கள் பொலிந்தமையானே தாமும் பொலிவுபெற்றன. தேனீக்களெல்லாம் பூக்கடோறுஞ் சென்றுசென்று தேனைக்குடைந்து சிறிதுமின்றி எடுத்துக்கொண்டுவந்து இறால்களிற் றெடுத்தன; மான்கள் களித்துத் துள்ளின; ஆறுகளிலெல்லாம் அன்னப்பயிவைகள் பிரியாது குடைந்தாடின; கரியமேகத்தினருகேபொருந்த வரிசையாக வெள்ளியகொக்குகள் பறந்தன; ஒன்றையொன்று நெருங்கி இடையில் ஒழியாமல் நெடிய வரிசையையுடையனவாய் மேகத்தினருகேபொருந்த நாரைகள் பறந்தன; புற்கள் முளைத்துப் பசுமையுற்றன; ஆண்மயில்களெல்லாம்

தோகையைவிரித்துநின் றூடின; செந்தாமரையினரும்புகள் போரும் பாகிச் சிவந்துதோன்றின; அவற்றின்கொடிகள் துவண்டன; ஆம்பிகள் மூளைத்துப் புற்களேமேயும் ஆக்களால் இடறுண்டு சிதறி நிலத்திற் கிடந்தன; பிடவுகளெல்லாம் மெல்லிய வெண்மையானபூக்களைப் பூத்தன; என்பதே.

இனி, இப்பொருள்களினியல்பை உவமைமுதலியவற்றின் வாயிலாகப் புனைந்துரைக்குங்கால், தமக்குரியகாலம் நீங்கினமையாலே குயில்கள் கூவாதொடுங்கினமைக்கும், தமக்குரியகாலம் வந்தமையானே மயில்கள் ஆடினமைக்கும், நாயகரைப்பிரிந்து ஒடுங்கிய மகளிரையும், செல்வமுற அதனல் தலைநிமிர்ச்சிகொண்டாரையும் உவமையாக்கி,

"ஆடினமயில்கள்பேசாதடங்கினகுயில்களன்பர்த்
தேடுறத்தளர்ந்தார்போன் றுந்திருவுறக்கிளர்ந்தார்போன்றும்" (உடு)

என்றும், ஒன்றையொன்று பின்னி வீழ்ந்துகிடந்த காந்தட்கொடிகளை ஒன்றையொன்று தழுவி இணைவிழைச்சுற்று அறிவுமயங்கி வீழ்ந்து பிரியாதுகிடந்த நாகங்களுக் குவமையாக்கி,

"வாளெயிற்றரவம்போலவான்றலைதோன்றவார்ந்த
தாளுடைக்கோடறம்மைத்தழீஇயனகாதறங்க
மீளலவாகிமன்னவிழைவனவுணர்வுவீந்த
கோளரவென்னப்பின்னியவற்றொடுங்குழைந்துசாய்ந்த" (உஎ)

என்றும், இந்திரகோபம் எள்ளிட இடமுமின்றி யெங்கும் பரந்தமைக்குப் பிரிந்து சிலகாலங்கழியவந்த தலைவர்களை (ஆசைமிகுதியானே) அடுத்தடுத்துக்கூடியபெண்கள் தம்புணர்ச்சிக்கண்ணே பலமுறை உண்டு கான்ற தம்பலக்குவியல் சிதறிக்கிடந்தமையை உவமையாக்கி,—

"எள்ளிடவிடமுமின்றியெழுந்தனவிலங்குகோபம்
தள்ளுறத்தலைவர்தம்மைப்பிரிந்தவர்த்தழீஇயதூமக்
கள்ளுடையோதியார்தங்கலவியிற்பல்காற்கான்ற
வெள்ளடைத்தம்பற்குப்பைசிதர்ந்தெனவிரிந்தமாதோ" (உஅ)

என்றும், செங்காந்தட்பூவுக்கு விளக்கையும் கருவிளைப்பூவுக்குக் கண்களையும் உவமையாக்கி, "தோன்றி யாங்கின்மாடே—விளக்கின

மொத்த காண்போர் விழியொத்த விளையின் மென்பூ" (௩௧) என்றும், மலர்ந்த கூதாளம்பூவுக்குக், கொட்டுந் தாளத்தையும், அப்பூவிற் பேடையும் ஞிமிறும் பாய அப்பூவசைதற்கும், அசையும் போது வண்டினுண்டாகு மொலிக்கும், கொட்டலையும் அதனாற்பிறக்கு மொலியையும் உவமையாக்கி,

"பேடையுஞிமிறும்பாயப்பெயர்வுழிப்பிறக்குமோசை
யூடுறத்தாக்குந்தோறுமொல்லொலிபிறப்பநல்லார்
ஆடியற்பாணிக்கொக்குமாரியவமிழ்தப்பாடற்
கோடியதாளங்கொட்டன்மலர்ந்தகூதாளமொக்க" (௩௨)

என்றும், குவிந்த குவளைமலருக்கு நாயகர்பிரிய அதனாற் களிப்பின்றி யொடுங்கிய மகளிர்கண்களையுவமையாக்கியும், முல்லைகள் அரும்புதற்கு அவர்வரவைக்கண்டு மகிழும் மகளிரது புன்முறுவலை உவமையாக்கியும்,

"தேரினன்னெடுந்திசைசெலச்செருக்கழிந்தொடுங்கும்
கூரயிற்றருங்கண்ணெனக்குவிந்தனகுவளை
மாரனன்னவர்வரவுகண்டுவக்கின்றமகளிர்
மூரன்மென்குறுமுறுவலொத்தரும்பினமுல்லை" (௩௫)

என்றும், மழைபின்வரவினாலே தமக்கிடமாகிய குளங்கள்குளிர்தலி னாலே தாமும் பொலிந்த தாமரைகளுக்கு, விருந்துகண்டு உள்ளம் பொலிதலினாலே தாமும் பொலிந்த மங்கையர்முகங்களை உவமையாக்கி,

"வெளிக்கண்வந்தகார்விருந்தெனவிருந்துகண்டுள்ளங்
களிக்குமங்கையர்முகமெனப்பொலிந்தனகமலம்" (௩௬)

என்றும், தேனீக்கள் மலர்கடோறும் சென்று அவற்றிலுள்ள தேனைக் குடைந்து சிறிதுமின்றி எடுப்பதற்கு, காமநூனெறி காமுகர் வேசிய ரிருக்குமிடந்தோறுஞ்சென்று அவர்களிடத்தே காமநூலிற்சொல்லிய லீலைமுறையால் இன்பங்கொள்ளுதலையும், அவைகள் அத்தேனைக் கொண்டுவந்து கூட்டிற்றொகுப்பதற்கு, சுவைகள் (இரசம்) ஒன்பதை யும் தந் நாடகத்தில் ஒருங்குதொடுக்குங் கவிஞர்களையும் உவமையாக்கி,

"சாதநாண்மலரியாவையுங்குடைந்தனதடவிச்
சூதநூனெறிவிடரெனத்தேன்கொண்டுதொகுப்ப

பாதநூன்முறைநாடகம்பயனுறப்பகுப்பான்
இரதமீட்டுறுங்கவிஞரைப்பொருவினதேனீ" (ரு எ)

என்றும், மான்கள் களித்துத்துள்ளுதலை, நோக்காற் றம்மைவென்ற சீதையை உருவால்வென்றுவிட்டேம்; (அதனை நாம் வெளியாகக்கூறேம்; கூறில் அவள்நாயகன் எம்மைக் கொன்றுவிடுவான்) என்று களித்தாற் போலக் களித்தன எனத் தற்குறிப்பேற்றமாக்கி,

"நோக்கினுண்மைநோக்கழிகண்டநுண்மருங்குற்
றூக்கணங்கருஞ்சீதைக்குத்தாக்கருந்துன்ப
மாக்கினுநமதுருவினென்றரும்பெறலுவகை
வாக்கினுனுரையாமெனக்களித்தனமான்கள்" (ரு அ)

என்றும், அன்னங்கள் நெடுங்காலம்பெறுதநீரைப் பெற்று ஆசையினுலே அந்நீரை நீங்காது குடைந்து விளையாடற்கு, நெடுங்காலம் தாம் விட்டுப் பிரிந்த தலைவியைக்கூடியவிடத்து அவளை நீங்காது கலந்துவிளையாடு தலை உவமையாக்கி,

"நீடுநெஞ்சுறுநேயத்தானெடிதுறப்பிரிந்து
வாடுகின்றனமருளுறுகாதலின்மயங்கிக்
கூடுநன்னதித்தடந்தொறுங்குடைந்தனபடிவுற்
றூடுகின்றனமகளிரைப்பொருவினவன்னம்" (ருகூ)

என்றும், மேகத்தினருகே பொருந்த ஒன்றையொன்று மருவி இடைவிடாது நெடியவரிசையையுடையனவாய்ப் பறக்கும் நாரைகளுக்குத் திருமாலின்மார்பில்விளங்கும் உத்தரீயத்தையுவமையாக்கி,

"மருவிநீங்கல்செல்லாநெடுமாலையவானிற்
பருவமேகத்தினருகுறக்குருகினம்பறப்ப
திருவினுயகனிவனெனத்தேமறைதெரிக்கு
மொருவன்மார்பினினுத்தரீயத்தையுமொத்த" (சுக)

என்றும், தாமரையிலைத்தொகுதியினிடையிடையே அவற்றின் பூக்கள் சிவந்துதோன்றறற்கு, நாயகாது குஞ்சி இடையிடையே செவ்வொளியைக் கொள்ள அவற்றிற்கோர் புதுநிறத்தைக் கொடுக்கும் அடிச்சுவட்டை உவமையாக்கி,

"செஞ்செவேலவர்செறிசிலைக்குரிசிலரிருண்ட
குஞ்சிசேயொளிகதுவுறப்புது நிறங்கொடுக்கும்
பஞ்சிபோர்த்தமெல்லடியெனப்பொலிந்தனபதுமம்" (சச)

என்றும், சிதறிக்கிடந்த ஆம்பி (காளான்) களுக்குச் செறி தயிர்த் துண்டங்களை உமமையாக்கியும், பிடவம்பூவுக்குப் பொங்கியெழும் பால்நுரையை உவமையாக்கியும்,

"பொழிந்தமாநிலம்புற்றாக்குமட்டியபுனிற்று
வெழுந்தவாம்பிகளிடறினசெறிதயிரேய்த்த
மொழிந்ததேனுடைமுகிழ்முலையாய்ச்சியர்முழவிற்
பிழிந்தபால்வழிநுரையினைப்பொருவுவபிடவம்" (சசு)

என்றும், புனைந்துரைத்த செய்யுட்களில் அமைந்துகிடக்கும் உவமைகள் இத்துணையின்பம்பயக்கப்புணர்த்திய கம்பன்மதிநுட்பம் அதிநுட்பமுடைத்து என்பதை யார்மறுக்கவல்லார்.

[மேற்காட்டிய உடு-ம் செய்யுளில் 'திருவுறக்கிளர்ந்தார் போன்று' என்பதற்கு நாயகருடைய செல்வத்தையடைதலாலே மனக்கிளர்ச்சியடைந்தவர்களாகிய மகளிரைப்போன்று' என்றும், நடு-ம் செய்யுளில் 'தேரினன்னெடுந்திசை செல' என்பதற்கு, 'சூரியன் பெருந்திசையாகிய மேற்றிசையிற் சென்று அத்தமிக்க' என்றும், சச-ம் செய்யுளிலே 'மெல்லடியெனப் பொலிந்தன பதுமம் என்பதற்கு 'அடியைப்போலத் தாமரைமலர்கள் பொலிந்தன' என்றும் பொருள்கொள்வாருமுளர். ஏற்பனநோக்கி யுணர்ந்துகொள்க.

உஎ-ம் செய்யுளுக்கு நாகம் கோடலைத்தழுவ அக்கோடலைத்தழுவிக் குழைந்துசாய்ந்த என்று கொள்ளுவாருமுளர். அது சிறிதும் பொருந்தாது.

நஉ-ம் செய்யுளிலே கோடிய என்பதைக் கோடியர் எனத்திருத்தி மூலபாடங்கொள்க. மலர்ந்த கூதாளம் கொட்டலையுடைய தாளத்தையொக்க, அவற்றிலேபாயப் பிறக்கு மோசை ஒல்லொலிபிறப்பபோன்ற என முடித்துக்கொள்க. போன்ற சொல்லெச்சம். தாளங்கொட்டலைக்

கூதாளம் அசைதல் ஒக்க என முடிக்கினு மமையும். அசைதல் 'பெயர் வழி' என்பதனாற் பெறப்படும்.

௩௬-ம் செய்யுளிலே குளத்தை மங்கையாகவும், குளத்தினகத்தை உள்ளமாகவும் தாமரையை முகமாகவும் கொள்க. குளம் காராகிய விருந்தைக் கண்டு அதனாற் றன்னகம் பொலியவே அதிலுள்ள தாமரைக் கொடிகளும் பொலிவடைந்தன எனக் கொள்க. ஒற்றுமைபற்றித் தாமரை முகமாகக் கொள்ளப்பட்டது. இனித் தாமரைக்கொடிகளின் மூலங் குளிர அவைகளும் பொலிந்தன எனினு மாம்.

௪௪-ம் செய்யுளிலே 'அடி' யென்பதற்கு 'அடிச்சுவடு' எனப் பொருள்கோடலே சிறப்பாம். ஏனெனின், ஆடவர்குடுமியிலே பாதச் சுவடுபட்டு இடையிடையே விளங்கல்போல, இலைகளின் இடையிடையே செந்நிறப்பூக்கள் விளங்கலின். குடுமியிலே பாதச்சுவடுகள் விளங்குவ தாக, "விஞ்சைவேந்தர்—குஞ்சியந் தலத்து நீலக் குலமணித் தலத்து மாதர்—பஞ்சியங் கமலம் பூத்த பசுஞ்சுவ டுடைத்து மன்னோ" என (வரைக்காட்சி-௩அ) முன்னுங் கூறியவாற்றானறிக. புதுநிறங்கொடுக்கும் என்பதைப் பாதத்திற்கு அடையாக்கிப் பொருள்கோடல் இத்துணைச் சிறப்பின்றாம். இனிக் குஞ்சி தன்கணுள்ள சேயொளியைக் கதுவிக் கொள்ள மீளவும் புதுநிறங்கொடுக்கும் பஞ்சியை யூட்டிய பாதம் எனக் கொண்டு அதனை உவமையாக்கினும் அமையும்.]

[தொடரும்.]

சி. கணேசையர்.

# தமிழ்த்தொகைமொழி.

—(o)—

தமிழ் லெக்ஸிகனுபீஸ் உதவிப்பதிப்பாசிரியர்
ப்ருஹ்மஸ்ரீ P. S. சுப்பிரமணியசாஸ்திரி (M.A., L.T.,) அவர்கள்

எழுதுவது.

தொகைமொழியென்பது தொகுக்கப்பட்ட பகுதியைக்கொண்ட மொழி. தமிழில் தொகையென்பதும் வடமொழியில் ஸமாஸ: (சமாசன்) என்பதும் ஒருபொருட்கிளவி. தொல்காப்பியனார் அத்தொகைமொழி [1]அறுவகைப்படுமென்றும், அவை வேற்றுமைத்தொகை, உவமத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என்றும் கூறியுள்ளார். அவற்றுள் வேற்றுமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை இம்மூன்றும் முறையே வடமொழி தத்புருஷ: (தற்புருடன்), த்வந்த்வ: (துவந்துவன்), பஹுவ்ரீஹி: (வெகுவ்ரீகி) இவற்றோடு ஒன்றும். உவமத்தொகையும், வடமொழி உபமாநபூர்வபதகர்மதாரய (முன்மொழியொப்புக் கன்மதாரயன்) மும் ஒன்றே. வினைத்தொகை பண்புத்தொகையிரண்டும் விசேஷணபூர்வபதகர்மதாரய (முன்மொழிப்பண்புக்கன்மதாரயன்) மும் ஒன்றே.

தொல்காப்பியர் வேற்றுமைத்தொகை முதலிய ஆறனுக்கும்,

"அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல." (தொல். சொல். 413)
உவமத் தொகையே யுவம வியல. (தொல். சொல். 414)
வினையின் றொகுதி காலத் தியலும். (தொல். சொல். 415)

---

[1]வேற்றுமைத் தொகையே யுவமத் தொகையே
வினையின் றொகையே பண்பின் றொகையே
யும்மைத் தொகையே யன்மொழித் தொகையென்
றவ்வா றென்ப தொகைமொழி நிலையே. (தொல். சொல். 412).

வண்ணத்தின் வடிவி னளவிற் சுவையினென்
றன்ன பிறவு மதன்குண நுதலி
யின்ன திதுவென வரூஉ மியற்கை
யென்ன கிளவியும் பண்பின் ஞெகையே. (தொல். சொல். 416)

இருபெயர் பலபெய ரளவின் பெயரே
யெண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
யெண்ணின் பெயரோ டவ்வறு கிளவியுங்
கண்ணிய நிலத்தே யும்மைத் தொகையே. (தொல். சொல். 417)

பண்பு தொகவரூஉங் கிளவி யானு
மும்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானு
மீற்றுநின் றியலு மன்மொழித் தொகையே. (தொல். சொல். 418)

என்று இலக்கணம் கூறியுள்ளார். அவ்விலக்கணப்படி இருமொழிகளும் பண்பாயுள்ள 'கருநிறம்' முதலிய சொற்களும், இரண்டும் பண்பியா யுள்ள 'சாரைப்பாம்பு' முதலிய சொற்களும் எவ்வகைத்தொகையென்று அறிவது எளிதன்று. சேனவரையர் 'வண்ணத்தின்......' என்னுஞ் சூத்திரவுரையில் 'என்னகிளவியும்' என்றதனால், சாரைப்பாம்பு, வேழக் கரும்பு, கேழற்பன்றி எனப் பண்புதொகாது பெயர் தொக்கனவும் அத் தொகையாதல் கொள்க என்றார். இதைக் கருத்துட்கொண்டே நன்னூலார் 365-ம் சூத்திரத்தில், 'பண்பை விளக்கும் மொழிதொக் கனவும்-ஒருபொருட்கு இருபெயர்வந்தவும் குணத்தொகை'என்று கூறியுள்ளார். தொல்காப்பியர்மதத்தையே நேமிநாதமுடையாரும், நன்னூலாரும், இலக்கணவிளக்கமுடையாரும் இலக்கணக்கொத்துடையாரும் கையாண்டுள்ளார். வீரசோழியவாசிரியர் அவர்மதத்தைச் 'செந்தமிழ்நர்'மதம் என்று பின்கூறி, முன் வடமொழியில் வாரருசி (வாருசி)யால் இயற்றப்பட்டது என்று பலநாளாய் வழங்கப்பட்ட சமாசகாரிகைகளை மொழிபெயர்த்துள்ளார். அவர்முறையையே பிரயோகவிவேகநூலாரும் கைப்பற்றினர்.

இனி வீரசோழியத்தும், பிரயோகவிவேகத்தும் உள்ள கவித்துறைகளைக்காட்டி, அவற்றுக்கு ஒத்த வாருசிகாரிகைகளைக் காட்டுவோம்.

### வீரசோழியம்.

தற்புரு டன்பல நெற்கன்ம தாரயந் தாங்கியசீர்
நற்றுவி குத்தொகை நாவர் துவந்துவ நல்லதெய்வச்
சொற்பயன் மாந்தர்க ளவ்விய பாவமி தென்றுதொன்மை
கற்பக மாப்பகர்ந் தார்தொகை யாறுங் கனங்குழையே. (தொகைப். 2.)

### பிரயோகவிவேகம்.

தற்புரு டன்றுவி குப்பல நெற்கர்ம தாரயனோ
டுற்பல வாணெடுங் கட்பசுந் தேமொழி யொண்டொடியாய்
சொற்பயி லவ்விய யீபாவ மேனைத் துவந்தனெனக்
கற்பவர் கூறுஞ் சமாசன்க ளேதொகைக் கட்டளையே. (சமாசப். 3.)

### காரிகை.

𑌷𑍋𑌢𑌾 𑌸𑌮𑌾𑌸𑌸𑍍𑌸𑌂𑌕𑍍𑌷𑍇𑌪𑌾𑌦𑍇𑌕𑌤𑍍𑌰𑌿𑌂𑌶𑌦𑍍𑌵𑌿𑌧𑌾𑌃𑌪𑍁𑌨𑌃।

... ... ... ... ...

𑌤𑌤𑍍𑌰𑌾𑌵𑍍𑌯𑌯𑌾 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌦𑍍𑌵𑌯𑌾 𑌕𑌰𑍍𑌮𑌧𑌾𑌰𑌯𑌃।
𑌦𑍍𑌵𑌯𑌾𑌵 𑌬𑌹𑍁𑌵𑍍𑌰𑍀𑌹𑌿𑌃 𑌦𑍍𑌵𑌿𑌗𑍁𑌰𑌾𑌹𑌾𑌰𑌦𑍍𑌵𑌿𑌤𑍇 𑌤𑌥𑌾 𑌦𑍍𑌵𑌿𑌧𑌾॥
𑌦𑍍𑌵𑌿𑌂𑌦𑍍𑌵𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑌾𑌪𑍁𑌵𑌿𑌲𑍍𑌯𑍋 𑌜𑍇𑌞𑍍𑌯𑍋𑌽𑌵𑍍𑌯𑌯𑍀𑌭𑌾𑌵𑌵𑍍𑌰𑍁𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑌃।

... ... ... ... ...

### வீரசோழியம்.

எழுவாய் முதலெழு வேற்றுமை யோடு மெழுந்தடையில்
வழுவாத நஞ்ஞொடெட் டாந்தற் புருடன் வளர்துவிகு
தழுவார்ந்த வெண்மொழி முன்னாய் வருந்தத் திதப்பொருண்மேற்
குழுவா ரொருமையொப் புப்பன்மை யொப்புக் குறியிரண்டே. (தோ.3.)

### பிரயோகவிவேகம்.

தற்புரு டத்தொகை வேற்றுமை யெட்டனுட் சார்ந்த நஞ்ஞுச்
சொற்பொரு ளன்மை மறையின்மை காட்டுந் தொகைத்துவிகு
முற்பத மெண்பிற் பதந்தத்தி தார்த்த முடித்துமெழூஉம்
பற்பல வேகவற் புவி யநேகவற் பாவியென்றே. (சமாசப். 4.)

காரிகை.

தத்புருஷோ(அ)வ்யயீபாவோ த்வந்த்வோ பஹுவ்ரீஹிஸ்ததா ... நஞ்கர்மதா ...
... ... ... ... [ஷட்விதா: ||
ஸமேவகர்மதாரயோ நகர்மதாரய: த்விகுரபி ஸமாஸா: |

வீரசோழியம்.

இருமொழி பன்மொழி பின்மொழி யெண்ணே டிருமொழியெண்
மருவும் விதியா ரிலக்கண மற்றைச் சகமுன்மொழி
பரவுந் திகந்தரா ளத்தொகை யென்னப் பலநெற்றொகை
விரியுமொரேழவைவேற்றுமொழிப்பொருண்மெல்லியலே. (தொகைப். 4)

பிரயோகவிவேகம்.

இருமொழி பன்மொழி பின்மொழி யெண்ணே டிருமொழியெண்
டருமொழி யொற்றொழி திக்கந்த ராளஞ் சகமுனிற்கு
மொருமொழி யேனைவிதிகா லக்கணத் தோடுவரும்
பெருமொழி யாகி வெகுவரி யன்மொழிப் போதைந்தே. (சமாசப் 7)

காரிகை.

ஆத்யாம்ஸ்சாத்யாம் பஹுவ்ரீஹி: பதைஸ்ச ஸம்க்யாவிஸ்யயம் தத்
வசம் த்வயம்வா|
யஸ்யாஸ்த த்புருஷஸ்ச ஸ்தத்புருஷம் தாஸத்திர்யாத்க்ஷா ||

வீரசோழியம்.*

முன்மொழிப் பண்பு மிருமொழிப் பண்பு மொழிந்தமைந்த
பின்மொழி பெசப்பொடு முன்மொழி யொப்பும் பிணக்கொன்றிலா
முன்மொழி நற்கருத் தும்முன் மொழிநற் றுணிவுமென
நன்மொழி யார்கன்ம தாரய மாறென்ன காட்டினரே. (தொகைப்.5.)

பிரயோகவிவேகம்.

முன்மொழிப் பண்பிரு பண்பு விசேடிய முன்மொழிதன்
முன்மொழித் துல்லியம் பின்மொழித் துல்லிய மொய்குழலாய்

---

*வீரசோழியவாசிரியர் விசேடியமுன்மொழியைக்கூறாது கன்மதாரயன் ஆறென்றார். பிரயோகவிவேகநூலார் அதையு மெடுத்துக்கொண்டு அதற்குத் 'தெய்வப்புலவன்றிருவள்ளுவன்' என்று உதாரணம் கூறியுள்ளார்.

முன்மொழிச் சம்பா வணையவ தாரண முற்றுமிவை
நன்மொழிப்பண்புத்தொகைக்கன்மதாரயனற்றமிழ்க்கே. (சமாசப். 5.)

காரிகை.

𑌏𑌕𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌿𑌵𑌿𑌹𑌿𑌤𑌸𑍍𑌵𑌾𑌦𑌿𑌦𑍍𑌵𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮𑌧𑌾𑌰𑌯𑌃 𑌕𑌥𑌿𑌤𑌃।

... ... ... ...

𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌪𑌦𑍇 𑌵𑌿𑌶𑍇𑌷𑍍𑌯𑌂 𑌤𑌯𑍋𑌰𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌪𑌿
𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌂 𑌚।

𑌯𑌸𑍍𑌯𑌾𑌵𑌰𑍋 𑌨𑌂𑌪𑌰 𑌤𑌸𑍍𑌯𑌾𑌧𑌿𑌕𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌵 𑌨𑌾𑌚𑌾𑌵𑍍𑌯𑌯𑌾𑌰𑌣𑌾𑌚।

*வீரசோழியம்.

முன்மொழி யவ்விபஞ் சேர்தொகை பேர்முன் மொழித்தொகையே
சொன்மொழி யவ்விய பாவ மருவுந் துவந்துவமும்
வன்மொழி யாமித ரேதரம் வாய்ந்த சமாகாரமா
நன்மொழி யானுரைத் தார்கள் சமாச நறுநுதலே. (தொகைப். 6.)

பிரயோகவிவேகம்.

முன்மொழிப் பேர்ச்சொ லிடைச்சொ லிரண்டு முாணிநிற்குந்
தன்மொழி யவ்விய யீபாவ மும்மைச் சகாரத்திலே
யின்மொழித் தொந்தன சமாகாரத் தோடித ரேதரமா
மன்மொழித் தோற்றஞ் சமுச்சயத் தோடுமன் வாசயமே. (சமாசப். 6.)

காரிகை.

𑌯𑌤𑍍𑌰𑌾𑌵𑍍𑌯𑌯𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌪𑌦𑌂 𑌯𑌥𑌾𑌵𑌾
𑌸𑌮𑌾𑌸𑌂 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌤𑌯𑌂 𑌸𑌮𑌾𑌸𑌂 𑌤𑌮𑍍।
𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌤𑍍𑌤𑌰𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌾 𑌬𑌹𑌵𑌃 𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌾𑌃
𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌾𑌵𑍍𑌯𑌯𑍀𑌭𑌾𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑌯𑌂 𑌤𑌿॥
𑌸𑌂𑌹𑌿𑌤𑌂 𑌚𑍇𑌤𑍍𑌤𑌦𑌵𑌯𑌵𑌸𑍍𑌯𑌾𑌦𑌵𑌯𑍇𑌭𑍍𑌯𑌿𑌤𑌿 𑌵𑌿𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌃।
𑌇𑌤𑌰𑍇𑌤𑌰𑌯𑍋𑌗𑌾𑌤𑍍𑌯𑌃 𑌸𑌮𑌾𑌹𑌾𑌰𑌾𑌹𑍍𑌵𑌯𑌸𑍍𑌤𑌥𑌾।
𑌚𑌾𑌹𑍍𑌯𑌾𑌂 𑌪𑌞𑍍𑌚𑌾𑌹𑍍𑌯𑌾𑌂 𑌬𑌹𑌵𑍋𑌽𑌪𑌿 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌳 𑌵𑌿𑌤𑌿 𑌚 𑌤𑌦𑍍𑌵𑌿𑌧𑌃॥

---

*வடமொழியில் 𑌉𑌭𑌯𑌪𑌦𑌾𑌵𑍍𑌯𑌯 என்ற அவ்வயயீபாவசமாசத்தில் இருமொழியும் பெயராயுள்ளதுபோல இருமொழிப்பெயரவ்வியயீபாவம் தென்மொழியில் இல்லென்று அதை வீரசோழியவாசிரியரும் பிரயோகவிவேகநூலாரும் கூறவில்லை. துவந்துவனிலு மிருமொழித்துவந்துவன்பலமொழித்துவந்துவனென்றுபிரிக்காது வடமொழியிற்கூறியுள்ள நால்வகையை இருவகையாகப்பிரித்துள்ளார்கள்.

## *பிரயோகவிவேகம்

தற்புரு டன்றுவி குக்கர்ம தாரயன் ரூமுதன்மை
பிற்பத மாமெழு வாயா மொரூஉத்தொகை பெண்ணணங்கே
முற்பத மவ்விய யீபாவ மொப்பு முறைபிறழுஞ்
சொற்பதந்தொக்கவையெல்லாமுதன்மைதுவந் துவனுக்கே. (சமாசப். 8.)

காரிகை.

தத்புருஷோऽஸ்ய விக்ரஹ:............
உத்தரபதார்த்தநிஷ்டா: ப்ராயோऽவ்யயீ திவர்ணிதை: கதித: ।
... ... ... ... ... ...த்வியா த்விகு:
ஸங்க்யாவிவர்ணிதரம் தஸ்ராவஸ்தத்புருஷேऽத: ॥
... ... ... ... ... ...கர்மதாரய: கதித: ।
தத்புருஷாம் தஸ்ராவாத்தத்வ்ராயாந்யஹீதிதம்வாஸ்ய ॥
வஞ்சிவேஸ்ராऽவி ஸர்வ்யா பஹுவ்ரீஹிர்வதாயஸ்: த்ர்யாऽவ்யயீ
ஹாவதிதீரயந்தி ।
ப்ராயாந்யம் ப்ராயஸோऽஸ்மிநு உபயோ: ஸ்யாத்வதாயஸ்யோ: ।
ஸஹிதம்த:... ... ... ... ... ... ... ॥

பிரயோகவிவேகவுரை.

வெகுவிரீகிக்கு அந்நியபதார்த்தப்பிரதானமென்பது ஆண்டே கூறினும்.

காரிகை.

... ... ... ... ... ... ... ... ... பஹுவ்ரீஹி:
கந்யவதாயஸ்ர ஸர்வ்ய: ப்ராயெணாத்த பஹ்யப்ரவரெஸ: ॥

---

* இக்கருத்தைத் தொல்காப்பியர்,
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலு
மிருமொழி மேலு மொருங்குட னிலையலு
மம்மொழி நிலையா தன்மொழி நிலையலு
மந்நான் கென்ப பொருணிலை மரபே. (தொல். சொல். 419)
என்னுஞ் சூத்திரத்திற் கூறியுள்ளார்.

# தொல்காப்பியச்சொல்லதிகாரக்குறிப்பு.

—:0:—

தமிழ் லெக்ஸிகனுபீஸ் உதவிப்பதிப்பாசிரியர்
ப்ருஹ்மஸ்ரீ P. S. சுப்பிரமணியசாஸ்திரி (M.A., L.T.,) அவர்கள்

எழுதுவது.

[கoஅ-ஆம்பக்கத்தொடர்ச்சி]

33-வது சூத்திரம்.
இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்.

இச்சூத்திரத்தின் பொருள்:—

உரையாசிரியர்:—இத்துணை என்று வரையறுக்கப்பட்ட சினைக்கிளவிக்கும் முதற்கிளவிக்கும் வினைப்படுத்துச்சொல்லுமிடத்து இறுதி உம்மைகொடுத்துச் சொல்லுக.

சேனாவரையர்:—கேட்போரால் இத்துணை என்று அறியப்பட்ட சினைக்கிளவிக்கும் முதற்கிளவிக்கும் வினைப்படுதொகுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக.

நச்சினார்க்கினியர்:-கேட்போரால் இத்துணையென்று அறியப்பட்ட சினைக்கிளவிக்கும் முதற்கிளவிக்கும் முடிக்குஞ்சொல்லோடுபடும் தொகுதிக்கண் உம்மைகொடுத்துச் சொல்லுக.

சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் வினைப்படுதொகுதியின் என்பதற்கு வினையோடு இயைந்த எண்ணின்கண் என்று பொருள்கொண்டார்கள் என்பது தெளிவாய் அவர்கள் உரையிலிருந்து விளங்குகின்றது. உரையாசிரியரோ வினைப்படுத்துச்சொல்லுமிடத்து என்று அத்தொடர்க்குப் பொருள்கூறியுள்ளார். ஆகையால் அவர் மதப்படி தொகுதி என்பதற்குச் சொற்றொகுதி என்றே பொருள்போலும். அங்ஙனங் கொள்ளின் இனைத்தெனவறிந்த சினைமுதற்கிளவியைக்கொண்ட வாக்கியத்தில் வினையோடுபொருந்திய சொற்றொகுதியின் இறுதியில், அச்சினைமுதற்கிளவியைத் தழுவ உம்மைகொடுத்துச் சொல்லவேண்டும் என்று சூத்திரத்துக்குப் பொருளாகும். அப்போது நம்பி கண்ணிரண்

டும் நொந்தன, பன்னிருகையும் பாற்படவியற்றி என்று உம்மை எண்ணுப்பெயரோடும், சினைப்பெயரோடுங் கொண்ட உதாரணங்கள் நன்கு பொருந்தும். சேனாவரையர், நச்சினார்க்கினியர்கொண்ட பொருளின்படி பன்னிருகையும்' என்பதற்கு 'இருசொல்லும் (பன்னிரண்டு, கை) ஒரு பொருண்மேல்வருதலிற் கையென்பதனோடியைந்த இயற்றி யென்னும் வினை தொகுதிப்பெயரோடு மியைந்ததாம்' என்று சமாதானங் கூற வேண்டியுள்ளது. மேலும், எல்லாவுதாரணங்களிலும் உம்மை விசேடிய மாகிய சினைமுதற்கிளவியைத் தழுவுமேயன்றி விசேடணமாகிய எண்ணைத் தழுவாதாகையால் எண்ணின்பின் உம்மைகொடுக்கவேண்டு மென்று ஆசிரியர் விதிப்பது பொருந்துமா என்று ஆராயத்தக்கது.

இளம்பூரணப்பதிப்பில், 'இனிச் சூத்திரத்திற் சினைமுதற்கூறிய முறையன்றிக் கூற்றினுள் உம்மையின்றி வருவனவும் உள' என்று வாக்கியம் உளது. அங்கு முறையன்றிக் கூற்றினுள் என்பது முறையன்றிக் கூற்றினன் என்றிருக்கலாமென்று தோன்றுகிறது.

நச்சினார்க்கினியத்தில் 'ஐந்தலைநாகம் உடன்றது என்பதற்கு நாகம் வினைப்படுதொகுதியன்று, முடிக்குஞ்சொல்லன்மையின்' என்னுளது. இங்கு நாகம் வினைப்படுதோகுதியன்று என்பதற்குப் பன்னிருகையும் என்பதிற் கை எனபதுபோல இங்கு நாகம் வினைப்படு தொகுதியன்று என்பதே பொருள்.

பாடபேதம்.

இளம்பூரணப்பதிப்பில், 'இனைத்தென வறிநத சினைமுதற் கிளவிக்கு, வினைப்படு தோகையி னும்மை வேண்டும்' என்றுளது. சேனாவரையப்பதிப்பிலும், நச்சினார்க்கினியப்பதிப்பிலும் தோகை என்பதற்குப் பிரதியாகத் தொகுதி என்றுளது. சேனாவரையருக்கு 'தொகை' என்ற பாடம் தெரிந்திருப்பின் கிளவியாக்கம் முதற்சூத்திரத்தில் மன என்பதற்குப் பிரதியாக 'மனனென்று பாடமோதுவாருமுளர்' என்று சொன்னதுபோல இங்கும் 'தொகையென்றோதுவாரும் உளர்' என்று கூறியிருப்பார். அவ்வாறு கூறாமையால் தொகுதி என்பதே அவருக்கும் பாடம்போலும்.

34-வது சூத்திரம். **மன்னாப் பொருளு மன்ன வியற்றே.**

இச்சூத்திரத்தின் பொருள்:—

உரையாசிரியர்:—இல்லாப்பொருளையுஞ் சொல்லுமிடத்து உம்மை கொடுத்துச்சொல்லுக.

சேனாவரையர்:—இல்லாப்பொருட்கும் இடமுங் காலமும் பொருளு முதலாயினவற்றொடுபடுத்து இன்மைகூறுதற்கண் உம்மைகொடுத்துச் சொல்லுக. (இடமுதலாயினவற்றொடு படுத்தற்கண் என்பது எற்புழிக் கோடலென்பதினாற் பெற்றாம்.)

நச்சினார்க்கினியர்:—உலகத்து நிலையில்லாதபொருளும், அது போல உம்மைகொடுத்துக் கூறுதல்வேண்டும். (பொருளும் என்ற எச்சவும்மையான் உலகத்தில்லாதபொருளும் இடமுங் காலமும் பொரு ளும் முதலாயினவற்றொடுபடுத்துக்கூறுதற்கண் உம்மைகொடுத்துக் கூறுதல்வேண்டுமென்று பொருளுரைத்துக்கொள்க.

இனிப் பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன்கோவிலுள்ளு மில்லை............என இல்லாப் பொருள்களும் எச்சவும்மை பெற்றவாறு காண்க.

## மன்னாப்பொருள்.

உரையாசிரியரும் சேனாவரையரும் மன்னாப்பொருள் என்பதற்கு இல்லாப்பொருள் என்று பொருள்கொண்டார்கள்; நச்சினார்க்கினியர், உலகத்து நிலையில்லாதபொருள் என்று பொருள்கொண்டு, அப்பொருள் கொண்ட 'மன்னுக பெரும நிலமிசை யானே', 'மன்னா வுலகத்து மன்னு தல் குறித்தோர்', 'மன்னாப் பொருட்பிணி முன்னிய' என்ற மூன்று மேற்கோள் காட்டிப் பிறகு இல்லாப்பொருள்களும் எச்சவும்மை பெற்ற வாறு காண்க என்று கூறியுள்ளார். இலக்கியங்களில் 'மன்னாப்பொருள்' என்பதற்கு 'நிலையில்லாப்பொருள்' என்ற பொருளே மிகுதியும் காணப் படுவதால் அவ்வாறுகூறி அதற்கு உதாரணமாக யாக்கையும் நிலையாது என்று கூறியுள்ளார். அஞ்ஞானியான ஒரு மாணவனைப்பார்த்து 'இவ் யாக்கை நிலைபாது, இதை நம்பாதே' என்று ஆசிரியன் உம்மைகொடா மற் சொல்லின், அவ்வாக்கியந் தவறு என்பது ஆராயத்தக்கது.

## அன்னவியற்றே.

உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் மூவரும் அன்ன வியற்றே என்பதற்கு உம்மைகொடுத்துக்கூறுக என்று பொருள்கொண்டுள்ளனர். உரையாசிரியர் முற்சூத்திரத்திற்கொண்ட பொருளுக்கு ஏற்ப, அன்னவியற்றே என்பதற்கு அதனையும் வினைப்படுத்துச்சொல்லுமிடத்து உம்மை கொடுக்க என்று கொண்டிருப்பின், 'பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளும் இல்லை' என்றவிடத்து வினைக்கு முன்னுள்ள பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன்கோயிலுள் என்ற வினைப்படுதொகுதியின் இறுதியில் உம்மைகொடுப்பது பொருந்தும்.

சேனாவரையர் 'இடமுதலாயினவற்றொடுபடுத்தற்கணென்பது ஏற்புழிக்கோடலென்பதனாற் பெற்றாம். அவற்றொடுபடாதவழிப் பவளக்கோட்டு நீலயானையில்லை என உம்மையின்றி வருமென்பதாம்' என்று கூறியுள்ளார். முற்சூத்திரத்தில் வினைப்படுதொகுதியின் என்பதற்கு வினையோடுபொருந்திய சொற்றொகுதிக்கண் என்று பொருள் கொண்டு, இங்கு 'அன்னவியற்றே' என்பதற்கு 'வினைப்படுதொகுதியினும்மை வேண்டும்' என்று பொருளாகக் கொண்டிருப்பின் ஏற்புழிக் கோடலால் இடமுதலாயினவற்றொடுபடுத்தற்கண்ணென்பது கொள்ள வேண்டாம். ஏனெனில் இல்லாப்பொருளை வினையொடுகூறுமிடத்து அவையில்லாமற் கூறிற் பொருள் பூர்ணமாகாது. 'பவளக்கோட்டு நீலயானையில்லை' என்ற வாக்கியம் பொருள்நிரம்பியதன்று. பவளக்கோட்டு நீலயானை அங்கேயும் இல்லையென்றாவது, அப்போதும் இல்லையென்றாவது இடம் முதலியவற்றொடுபடுத்துச்சொல்லுமிடத்துத்தான் நிரம்பும் எனவே படும். அச்சொற்களைச்சொல்லாவிடினும், அவை தொக்கு நின்றனவேயாம்.

நச்சினார்க்கினியர் 'பொருளும் என்ற எச்சவும்மையான் உலகத்தில்லாதபொருளும் இடமுங் காலமும் பொருளும் முதலியனவற்றொடு படுத்து' என்று, சூத்திரத்திற்கண்ட உம்மைக்குப் பொருள்கூறியுள்ளார். இச்சூத்திரத்தை 'இனைத்தென வறிந்த.........உம்மைவேண்டும்' என்ற முற்சூத்திரத்தோடு சேர்த்துநோக்கின், சினைமுதற்கிளவியேயன்றி மன்னாப்பொருட்கிளவியும் என்று எச்சவும்மையாகக்கொள்ளுவது பொருத்தமாகும்.

35-வது சூத்திரம். எப்பொரு ளாயினு மல்ல தில்லெனின்
அப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்.

இச்சூத்திரத்தின் பொருள்:—

உரையாசிரியர்:—எவ்வகைப்பட்ட பொருளாயினும் தன்னுழை யுள்ளதல்லதனை இல்லையெனலுறுமேயெனின், அவன்கூறிய பொருளல்லாத பிறிதுபொருள்கூறி, இல்லை என்க. (இதன் கருத்து, அவன் வினவப்பட்ட பொருட்கு இனமாய பிறிதுபொருளே கூறுக என்பது)

சேனவரையர்:—யாதாயினு மொருபொருளையாயினும் ஒருவன் அல்லதில் என்னும் வாய்பாட்டான் இல்லையெனலுறின், அப்பொருடன்னையே கூறாது அப்பொருளல்லாத பிறிதுபொருள் கூறுக.

நச்சினார்க்கினியர்:—யாதானுமொருபொருளை யாயினும் தன்னுழை உள்ளதல்லதனை இல்லையெனலுறுமேயெனின், அவன் வினாய பொருடன்னையே கூறாது அதற்கு இனமாகிய பிறிதுபொருளைக்கூறி இல்லையென்க.

உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் அல்லதில்லெனின் என்பதற்கு, தன்னுழையுள்ளதல்லதனை இல்லையெனலுறுமேயெனின் என்று பொருள்கொண்டனர். அவ்வாறாயின் "பயறுளவோ வணிகீர்?" என்றால் உழுந்தில்லை என்று உதாரணங்கூறியிருத்தல்வேண்டும். ஆனால் இருவரும் சேனவரையர்போல 'அல்லது' என்னுஞ் சொல்லை உபயோகித்து 'உழுந்தல்லதில்லை' என்று கூறியுள்ளார்கள். சேனவரையர் அல்லதில்லென்னும் வாய்பாட்டான் இல்லையெனலுறின் என்றார். ஆகையால், சேனவரையர்கூறுவதே பொருத்தமாயுளது.

உரையாசிரியர் அல்லதில்லென்பதற்குத் தன்னுழையுள்ளதல்லதனை என்றும், பிறிதுபொருள் என்பதற்கு இனப்பொருள் என்றும் பொருள்கொண்டதை நான்குகாரணங்களாற் சேனவரையர் மறுக்கிறார். (1) 'சூத்திரத்தில் அல்லது என்ற சொல்லைக் கருதாது, பொருளை ஆசிரியர் தொல்காப்பியனார் கருதினாராயின்) பயறுளவோவென்று வினாயவழிப் பயறில்லையென்றாற்படும் வழுவென்னை? (2) உள்ளதல்லதென்றல் கருத்தாயின் ஆசிரியர் அல்லதெனக் குறித்தபொருள்விளங்காமையின் அகப்

படச் சூத்திரியார். (3) பாம்புணிக்கருங்கல்லும் பயறும் விற்பானொருவ னுழைச்சென்று பயறுளவோவென்றவழிப் பாம்புணிக்கருங்கலல்லதில்லை யென்றால் இனப்பொருள்கூறுமையாற் பட்ட இழுக்கு ஒன்றுமில்லை. (4) இனப்பொருள் கூறுகவென்பதே கருத்தாயின் 'அப்பொருளல்லா இனப்பொருள்கூறல்' என்றே ஆசிரியர் சூத்திரித்திருப்பார் என்பதே.

நச்சினார்க்கினியர் சூத்திரத்தில் 'அல்லது' என்ற சொல்லுக்குப் பயனாகப் பயறுளவோ என்றவழி அல்லதென்பதொழியவும் பயறில்லை உழுந்துள என்றாற்படும் இழுக்கென்னையெனின், எப்பொருளாயினு மென்றது ஐம்பாற்பொருளையாகலானும் அல்லதென்பது அஃறிணை யொருமைப்பாற்கு உரித்தேனும், மற்றைநான்குபாற்கண்ணும் பால் வழுவாயுந் திணைவழுவாயும் மயங்குதலானும் அதுவண்டு அதனை யமைத்தற்கு 'எப்பொருளாயினு மல்லதில்' என்றார். 'அவனல்லது, அவளல்லது..........எனவரும்' என்கிறார். அல்லது என்பதை வினையெச்சமென்றால் என்ன தவறு? அல்லது என்ற சொல்லை இவ்வாறு வழங்கினால் வழுவன்று என்பது இச்சூத்திரத்தின்கருத்தாகுமா என்பது ஆராயத்தக்கது. பயறில்லை, உழுந்துள என்றாற்படும் இழுக்கென்னையெனின் என்ற ஆசங்கை உலகவழக்குக்கு ஏற்றதா என்று ஆராயவேண்டும். வணிகன் ஒருவனை ஏதோ ஒருபொருள் உள்ளதா என்று ஒருவன் வினவ, அப்பொருள் அவனிடமில்லாவிடில், அஃது இல்லை என்று அவ்வணிகன் பெரும்பாலும் விடையளிப்பதில்லையென்றே தோற்றுகிறது. சேனாவரையர்கூறிய மூன்றாவதுகாரணத்தைப் 'பயற்றுன் முடிக்குந்துறை உழுந்தான்முடித்தலன்றிப் பாம்புணிக்கருங்கலான் முடித்தலாகாமையிற் பயறுளவோ என்றார்க்குப் பாம்புணிக்கருங்கலல்லதில்லையென்றல் பொருந்தாமை உணர்க' என்று நச்சினார்க்கினியர் மறுப்பது எம்மட்டுஞ் செல்லுமென்பது அவரவர் மனநிலையைப் பொறுத்தது.

அல்லதில்லென்று சூத்திரத்திற் கூறியிருப்பினும், ஏகதேசவிகிருத நியாயம்பற்றி (ஏகதேஶவிக்ருத ந்யாயஃ) பயறல்லதில்லை முதலியன உதாரணமாயின,

36-வது சூத்திரம். அப்பொருள் கூறிற் சுட்டிக் கூறல்.

இச்சூத்திரத்தின் பொருள்:—

உரையாசிரியர்:—அவன் வினவின அப்பொருளையே சொல்லலுறுமேயெனிற் சுட்டிக்கூறுக.

சேனாவரையர்:—அல்லதில்லென்பான், பிறிதுபொருள்கூறாது அப்பொருடன்னையே கூறுமாயின் இப்பயறல்லதில்லையெனச் சுட்டிக் கூறுக.

நச்சினார்க்கினியர்:—அல்லதில்லென்பான் பிறிதுபொருள்கூறாது அப்பொருடன்னையே கூறுமாயின், முன்னர்க்கிடந்தபொருளைச்சுட்டிச் சொல்க.

சேனாவரையர், நச்சினார்க்கினியர் இருவரும் முற்சூத்திரத்தினின்று 'எப்பொருளாயினுமல்லதில்லெனின்' என்பதை அநுவிருத்தி செய்து இச்சூத்திரத்துக்குப் பொருள்கூறியுள்ளார். உரையாசிரியர் அவ்வாறு கூறவில்லை. ஆனால் அவர்களைப்போலவே 'இவையல்லது பயறில்லை, இப்பயறல்லது இல்லை' என்பவற்றை உதாரணமாகக் கூறியுள்ளார். ஆதலாற் சூத்திரத்தின்பொருளை அவ்வாறே கருதினார் போலும்.

பாடபேதம்.

நச்சினார்க்கினியப்பதிப்பிற் சுட்டாவது பயறல்லதில்லையெனின் என்று பாடம் உளது. சுட்டாவது என்பதற்குப் பிரதியாகச் சுட்டாது என்றிருக்கவேண்டும்.

37-வது சூத்திரம். பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்
பொருள்வேறு படாஅ தொன்ற கும்மே.

அவதாரிகை.

35-வதுசூத்திரத்தில், அல்லதில் என்னும் வாய்பாட்டை உபயோகிக்கும்போது பிறிதுபொருளாற் கூறவேண்டுமென்பதும், 36-வது சூத்திரத்தில், அப்போது பிறிதுபொருளாற் கூறாது அப்பொருளையே கூறின், சுட்டிக்கூறவேண்டுமென்பதும் விளங்கின. சுட்டிக்கூறுதல்

இருவகைப்படும்: (1) இப்பயறல்லதில்லை என்னுமிடத்திற்போலச் சுட்டை அப்பொருளைக்குறிக்கும் பெயரொடு கூறலாம்; (2) இவையல்லது பயறில்லை என்னுமிடத்திற்போலச் சுட்டை அப்பொருளைக்குறிக்கும் பெயரொடு கூருமல் தனியே கூறலாம்; முதற்கூற்றில் ஐயந்தோன்ருது. இரண்டாவதுகூற்றில் 'இவையென்னுஞ் சொல்லாற் பக்கத்திலிருக்கும் பயறோடு, உழுந்து, கொள்ளு முதலியனவும் சுட்டப்படலாமாகையால், அவ்வாறு கூறுவது வழுவா, வழுவன்ரு என்று ஆசங்கைதோன்ற, அது வழுவன்று என்று இச்சூத்திரம் உணர்த்துகின்றது. இவ்வவதாரிகை உரையாசிரியர், சேனவரையர் இருவருங்கூறியுள்ளபொருளுக்குப் பொருந்தும்.

இச்சூத்திரத்தின் பொருள்:—

உரையாசிரியர்:—பொருளொடுபுணராதுநின்ற சுட்டுப்பெயராமேயெனினும், அப்பொருட்கு இபைபுபட வருமேயெனின் அமையும்.

சேனவரையர்:—சுட்டானன்றிப் பொருள்வரையறுத்துணர்த்தாச் சுட்டுப்பெயராற்கூறினும், பொருள்வேறுகாது இப்பயறெனச் சுட்டிக்கூறிய பொருளேயாம்.

நச்சினர்க்கினியர்:—ஒருசுட்டுத் தான் உணர்த்துதற்கு உரிய அஃறிணைப்பொருளை உணர்த்தாது உயர்திணைப்பொருளை உணர்த்திநிற்குமாயினும் ஆம்; சிலபொருட்பெயர் சுட்டுப்பொருளை உணர்த்தாவாயினுந் தாஞ்சுட்டுவதோர் பொருளிடத்து வேறுபடநில்லாமல் அப்பொருளையே உணர்த்திநிற்கும்.

உரையாசிரியர், சேனவரையர் இருவருங்கொண்டபொருள் ஒன்றே, அவர்கள் மதப்படி 35, 36, 37 சூத்திரங்கள் ஒரேவிஷயத்தில் வெவ்வேறு பிரயோகங்களைப்பற்றிக் கூறுகின்றன. மேலும், இச்சூத்திரத்துக்கு அந்நுவயம் சூத்திரப்போக்குப்படியே.

நச்சினர்க்கினியர் 'இச்சூத்திரத்திற்குப் பலருங்கூறும் பொருளெல்லாம் முன்னிற்சூத்திரத்தாற் பெற்றவாறு காண்க' என்று கூறி முற்சூத்திரங்களிற் கூறப்பட்ட பொருள்கட்குத் தொடர்பில்லாத வேறுபொருள்கூறுகிருர். 36-வது சூத்திரத்திற் சுட்டிக்கூறல் என்ற விதி

யின் சாமர்த்தியத்தாற் சுட்டுப்பெயர் பொருளையுணர்த்துமெனப் பெறப்படுமாதலால் 'இவையல்லது பயறில்லை' என்ற பிரயோகம் வழுவாகாதென்று கருதி இங்ஙனங் கூறுகின்றார்போலும். சேனாவரையரும் ஒருகால் இக்கருத்தைக்கொண்டு "யானைநூல்வல்லானொருவன் காட்டுட் போவுழி ஓர் யானை அடிச்சுவடுகண்டு, இஃதரசுவாவாதற்கேற்ற இலக்கணமுடைத்து" என்றவழியும், 'இஃதோர் செல்வற்கொத்தனென ....... பெயர்தந்தேனே' என்புழியும், சுட்டுப்பெயர் பொருளொடுபுணராது நிற்றலின், அவற்றையே அமைக்கின்றது இச்சூத்திரமென்பாருமுளர் என்று பக்ஷாந்தரமாகக்கூறினார்போலும். அவர் இதனையே இச்சூத்திரத்துக்கு உதாரணமாகக்கொள்ளின், இஃதொத்தன் என்பதைப் புறநடைச்சூத்திரத்தால் அமைக்கவேண்டும்.

நச்சினார்க்கினியர் கூறும் பொருளின்படி இச்சூத்திரத்துக்கு அந்நுவயம்:—சுட்டுப்பொருளொடு புணராஆயினும் ஆகும்; பெயர் பொருளொடு புணரா ஆயினும் (சுட்டுப்)பொருள் வேறுபடாது ஒன்றாகும். முற்பாகத்திற்குப் பொருள்:—சுட்டு தனக்குப்பொருந்தியபொருளொடு புணராவிட்டாலும், குற்றமில்லை; உ-ம். இஃது ஒத்தன். பிற்பாகத்திற்குப்பொருள்: பெயர் சுட்டுப்பொருளை உணர்த்தாவாயினும், தாஞ் சுட்டுவதோர்பொருளிடத்து வேறுபடாமல் அப்பொருளையே உணர்த்தும்; உ-ம். "நாணிநின்றோ ணிலைகண் டியானும்......வானத், தணங்கருங்கடவுளன்னோள்....." என்னுமிடத்து அவள் என்று சுட்டிக்கூறாது 'வானத்தணங்கருங்கடவுளன்னோள்' என்று பொதுவாகக் கூறினது, என்றவாறு. இங்கு இரண்டுவிஷயம் அறிஞர்களால் ஆராயத்தக்கன. (1) சூத்திரப்போக்குக்குத் தக்கபடி அந்நுவயம் உளதா? (2) சூத்திரத்தை இரண்டாய்ப்பிரித்து, இரண்டுவிஷயங்களை விதித்தால், வாக்கியபேதம் என்ற குற்றம் வாராதா? என்பன.

38-வது சூத்திரம்.

இயற்பெயர்க் கிளவியுஞ் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கொருங் கியலுங் காலந் தோன்றிற்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவா
ரியற்பெயர் வழிய வென்மனார் புலவர்.

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவரும் பொருள் ஒரேவிதமாகக்கொண்டு, இயற்பெயர்வழிய என்ற மிகையான் இயற்பெயரல்லா உயர்திணைப்பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் சுட்டுப்பெயர் பின்வருதல் கொள்க என்று கூறியுள்ளார்கள். சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் தன்னினமுடித்தலால் விரவுப் பெயர்க்கும் அவ்வாறுவருதலைக் கொள்ளுகிறார்கள். 'இயற்பெயர்' எனவே உலகத்து இயன்றுவரும் பெயரெல்லாம் அடங்கும் என்று ஒரு வன்கருத்து என்று உரையாசிரியர் கூறியுள்ளார். இவ்வாறு கூறுவது பொருந்தாது என்பதை மனதில் வைத்துக்கொண்டுதான் 'அவன்சாத்தன் வந்தான், அவனொருவனு மறங்கூறும், ஈதொன்று குருடு என இயற் பெயரல்லா விரவுப்பெயர்க்கும் உயர்திணைப்பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் வரையறையின்றிச் சுட்டுப்பெயர் முற்கிளக்கவும்படுதலின், இயற்பெயர்க்கிளவியென்றார்' என்ற வாக்கியத்தைச் சேனாவரையர் கூறினார்போலும்.

'ஒருங்கு என்ற மிகையதனான், அகர இகரச் சுட்டே கொள்க' என்று உரையாசிரியர் கூறியுள்ளார். 'ஒருங்கியலுமென்றதனால் அவை யொருபொருண்மேல்வருதல் கொள்க' என்று சேனாவரையர் கூறினார்.

நச்சினார்க்கினியர் 'வழிய என்றதனான் இயற்பெயர்வழி நிற்றற்கு உரிய அகர இகரச் சுட்டே கொள்க' என்றார். சேனாவரையர் 'சுட்டுப்பெய ரென்றாராயினும், அகர இகரச் சுட்டுப்பெயரே கொள்க', என்றார்.

[தொடரும்.]

---

ஸ்ரீ:

# குருபரம்பரை.

## ஆளவந்தார்வைபவம்.



[கஉ0-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

அருளமருமாளவந்தாரத்திறத்திலினிதமரும்
பொருவரியபெரும்புகழிப்பூமியெங்கும்பொலிந்திலங்கத்
திருவரங்கநகரமருந்தேசிகரிற்றிலதமென
மருவுமணக்கால்நம்பிகேட்டுமனமகிழ்ந்தருளி. (கஎஅ)

சீராருநாதமுனிதிருமகனுர்மகனுய
வேராருங்கருணையனை யாங்காணவேண்டுமெனக்
காராருமுகில்வண்ணன்கழல்வணங்கிச்செங்கமலத்
தாரார்ந்ததிருமார்பன் றங்கியநற்பதிசார்ந்தான். (கஎகூ)

### வேறு.

மன்னவனுலகிற்பாதியும்பகுந்துமாசறவாழ்பவரிடத்தில்
மின்னுநூல்மார்பன்சாதுவாயொருவன்மேவினல்வாயிலோன்விடுமோ
வன்னதன்மையினலாளவந்தாரைக்காண்பதற்கிடம்பெருதாங்கே
பன்னரும்பகலுமிருந்தனரொருநாட்பத்தர்கட்கினியவர்பரிவால். (கஅ0)

திருமடைப்பள்ளிக்காரரைச்சார்ந்துசீரியவாளவந்தாருக்
கொருகறியமுதாயுகந்ததேதுரைமினென் றுரைத்திட்டிடவவர்கள்
மருவருங்குணத்தீர்தூதுவளைக்காய்விருப்பமாமற்றதொத்தொன்றுங்
கருதியிங்கமுதுசெய்திடாரென்ருர்கருணைமிக்கவருளக்களிப்பால். (கஅக)

### வேறு.

நன்றென்னவெழுந்தருளிநாதமுனிசொற்பேணி
யன்றுமுதற்றூதுவளைக்காய்பறித்தாங்கறுதிங்கட்
சென்றுதினங்கொடுத்தருளித்திருவுள்ளத்திற்சலியாம
லொன்றியசீருளமணக்கால்நம்பியுமங்குறைந்திடுநாள். (கஅஉ)

### வேறு.

ஆரிதுகொணர்வார்தினமெனவொருநாளாளவந்தாருரைத்தறியார்
சிருறவதனைச்சமைத்தவற்களிக்குந்திருமடைப்பள்ளியார்செப்பார்

போருமென்பாருமில்லைநம்பினைவின்பொருளறிபவர்களுமில்லை
தேரில்நாமிதனையொருதினமுடக்கிக்காண்டுமென்றிருந்துசிந்தித்து. (கஅங)

வேறு.

அன்றுமுடக்கியகத்திருந்தான்மணக்கால்நம்பியாளவந்தா
ரென்றுமுளவாந்தூதுவளைக்காயின்றெதனாவிலதாய்த்தென்
றொன்றுமமுதுசெய்யாதேயொறுத்தார்சமைத்தமடைப்பளியார்
நன்றிமறையோன்கொணர்ந்திலனென்றுரைப்பஞானமிக்கவரும். (கஅச)

வேறு.

மறையவன்யாவனெதுகொடுப்பீர்கள்வகுத்தெனக்குரைமினென்றுரைப்பக்
குறையறுஞானக்கொழுஞ்சுடர்க்குன்றேகோதிலாவேதியனொருவன்
நறைகமழ்துளபத்தாரினான்றொண்டன்நான்மறைமுடிவினையுணர்ந்தோன்
இறைவநின்னிடத்தில்முடிவிலாவன்பனீங்கறுதிங்களுண்டிவணம். (கஅரு)

கறியமுதிடுவனொன்றுநாங்கொடுக்கிற்கைக்கொளான்றேவரீரவன்றன்
வறுமையையகற்றிக்க்ஷேத்திரங்கொடுத்துமாறிதுவரும்படிசெய்தல்
நெறியெனவிருந்தேமென்றனர்கேட்டநிகரிலானவர்முகநோக்கி
யறிவினாலுயர்ந்தோனினியிவண்வந்தாலாக்குமென்முன்பில்மற்றவனை. (கஅசா)

வேறு.

என்றுரைத்தாளவந்தாரேகினார்மணக்கானம்பி
யன்றுபோய்மற்றைநாளிலடுமடைப்பள்ளிநோக்கிச்
சென்றனர்கறியுங்கொண்டுசீரியோய்வருதியென்னா
நன்றிசேராளவந்தார்முன்பிலநம்பிதன்னை. (கஅஎ)

வேறு.

கூட்டிக்கொடுபோயவர்விட்டுக்கோதிலவர்கைக்கறியமுதைக்
காட்டிக்கொணர்ந்தாரென்றுமிவரின்றுங்கொணர்ந்தாரெனக்காட்ட
வேட்டித்தலையிற்கறியமுதுமெய்யுங்குழைவுமகிழ்மாறன்
பாட்டிற்பதித்தசிந்தையுமாய்நின்றார்செயலைப்பலகாலும். (கஅஅ)

கோதிலாதவருள்விழியாற்குளிரநோக்கியீங்கிருத்தி
வேதமுதல்வாவெனவருகேயிருத்திவிருத்தராயிருந்தித்
தூதுவளைக்காயறுதிங்கட்டுணிந்துபறித்துச்சுமந்தளித்தீங்
ஓதும்வேண்டும்பொருளனைத்துமுடனீகின்றேனெனவுரைத்தார். (கஅகூ)

அத்திறம்வியந்துகூறுமாளவந்தாரைநோக்கி
மெய்த்திறமணக்கானம்பிவிளம்புவான்வேதம்வல்லோய்
இத்திறங்கேட்டியுங்கள்பேரனுறென்பால்முன்பு
பொய்த்திறமணையாநீதிப்பொருள்களிப்புவிமேற்றேடி. (கக0)

வைத்துவானடைந்தாரந்தமாப்பொருளநந்தமுண்டு
மெய்த்தவமுடையாய்கொள்கவிரைவினினென்னமெய்யே
பொய்த்தவங்கடிந்தான்கூறப்பொருவருமாளவந்தார்
கைத்தலம்பற்றிக்கொண்டகாரணமறைதியென்றான். (ககக)

பலபகல்செல்லுமந்தப்படியெலாமெடுத்துக்கூற
மலமறுசிந்தையோயுன்வாயிலோன்றகையாவண்ணம்
புலவர்களோடுமென்னைப்புகுத்துமாறறைதியென்றான்
நலமுறமணக்கால்நம்பிநன்றெனவாளவந்தார். (ககஉ)

வேறு.

அப்பொழுதேவாயிலோன்வருகவெனவருகழைத்திட்
டெப்போதுமீங்கிவரையென்பாலேவிடுதியென
முப்போதும்வந்துபேர்முதியோனேயெனமொழிந்தாங்
கொப்போதவரியபிரானெழுந்திருந்தன்றுள்புகுந்தான். (ககங)

வேறு.

அன்றுதிரும்பியகம்புகுந்துமணக்கால்நம்பியாளவந்தார்
நன்றிசேருமாளிகையில்ஞாலமுய்யும்பொருட்டாகச்
சென்றுதினமுமவருகிலிருந்துதிருந்துமிதங்கூறிக்
குன்றமெடுத்தான்பார்த்தனுக்குக்குலவுந்தேர்மேலிருந்தன்பால். (ககச)

அருளும்பகவற்கீதையெனுமத்தியாயம்பதினெட்டும்
உருளுஞ்சகடமுதைத்தபிரானுரைத்தபடியேயாங்கவற்குத்
தெருளுமார்த்திமிகத்தோன்றச்செப்பினர்நாட்பதினெட்டில்
மருளும்பிறவித்துயர்கடிந்தமணக்கானம்பிமற்றதற்பின். (ககரு)

அண்டர்மகிழக்கரைந்துருகியவைகேட்டிருந்தவாளவந்தார்
புண்டரீகன்றனையொத்தமணக்கானம்பிதனைப்புகழ்ந்திவ்
குண்டுகொல்லோவுபாயமிதற்கின்னேகாணலாவதனை
தொண்டனேனுக்கென்றுரைப்பச்சுருதிமுடிவையுணர்ந்தபிரான். (ககசா)

காட்டுகின்றேனுரையோடும்பொருளேயிர்தக்கவியுலகி
லீட்டுகின்றவூஞ்ஞானவிருளைத்துரக்குமெய்ஞ்ஞான

நாட்டமுடையாய்காணென்னயாருநண்ணுவிடத்திருந்து
வாட்டமில்லாமதிமிக்கான்வலதுசெவியில்மறைமுடிவில். (ககூஎ)

இருந்தசரமச்சுலோகத்தைத்திருமந்திரத்தையெழிற்றுயத்தைப்
பொருந்தவுரைத்தாராளவந்தார்புவனமேழுந்தொழுதேத்தக்
குருந்திலேறியாய்மகளிர்கோலக்கூறையெடுத்தமருங்
கருந்தண்முகின்மேன்மனமிருத்திக்கரைந்துகனல்சேர்மெழுகானார். (ககூஅ)

சீராராளவந்தார்க்குவிரத்திபிறந்தசெயனோக்கி
ஏரார்மணக்கால்நம்பியிவன்றன்னையின்றேகொடுபோய்நங்
காரார்பொழில்சூழரங்கனையேகாட்டவேண்டுமெனநினைந்து
பாரோரேத்தவிருவர்களும்பகருஞ்சொல்லும்பொருளும்போல். (ககூகூ)

இறையுநீக்கமில்லாதாரெழுந்துபோந்துமனுநூலின்
முறையேநடந்துநின்றிருந்துகிடந்துமுத்திநெறிகாட்டு
மறையின்முடிவில்வீற்றிருக்குமாசில்பாகவதர்கள்பலர்
உறையுமரங்கநகரணைந்தாங்குலகமேழுமுண்டுறங்கும். (உ00)

புண்டரீகக்கண்ணனைப்பூவினங்கையுடன்பணிந்தங்
கண்டர்புகழநின்றூழிநம்மணக்கால்நம்பியாளவந்தீர்
பண்டுநாதமுனிதேடிவைத்தபரமார்த்தந்தன்னைக்
கண்டுகொள்ளுமிதுவென்னைக்காட்டிக்கொடுத்தார்கருமணியை. (உ0க)

வேதநான்கின்முடிவதனில்விளங்குஞ்சரமச்சுலோகத்துக்
கோதும்பொருளீதெனமணக்கால்நம்பிகாட்டவோங்கியசீர்க்
கோதிலாதவாளவந்தார்குளிர்காவிரிசூழரங்கத்திற்
பூதமைந்துந்தொழுதேத்தும்புனிதனுரையுறநோக்கி. (உ0உ)

ஊற்றுமாறுமணற்கேணியென்னவுள்ளமடிந்துருகிச்
சாற்றுமுரையுந்தடுமாறித்தடக்கைகூப்பித்தாள்கூப்பிப்
போற்றியரங்கநமோவென்னப்புவிமேற்றாழ்ந்துபொங்குபுன
லேற்றசடையான்பிரமனுக்குமரியாய்சரணமென்றிறைஞ்சி. (உ0ரு)

பண்டுதொண்டரடிப்பொடிநற்பாணாழ்வாரப்பரம்புருடன்
புண்டரீகப்பாதாதிகேசம்பூண்டாங்கனுபவித்து
விண்டுகரைந்தீராளமானவாபோன்மிக்கவருங்
கொண்டல்வண்ணனவயவத்தைக்குணத்தையுணர்ந்தாங்கனுபவித்து. ()

வேறு.

தொடில்விடாவஞ்சமாயைத்தொந்தங்கண்முழுதுமன்றே
அடுகலஞ்சுடவிட்டாற்போலவாமுதலல்லவெல்லாங்

கடுவெனத்துறந்துநாலாமாச்சிரமங்கைக்கொண்டு
மடுவினிலானைகாத்தவள்ளலேகளைகணாக. (உ0ரு)

வேறு.

இருந்துமணக்கால்நம்பிதமக்கீந்தலத்துக்கிதயத்திற்
றிருந்தநோக்கிற்கைம்மாறின்றில்லையென்னும்படிதெளிந்து
கருந்தண்முகிலாந்திருவரங்கன்கழற்கீழ்மணக்கால்நம்பியொடு
பொருந்தியிருந்தாராளவந்தாரந்நாளவர்தம்பூங்கழலில். (உ0சு)

வேறு.

பெரியநம்பிதிருக்கோட்டியூரநம்பிபேரருளில்
உரியதிருமலைநம்பியோங்குமருளுடையாச்சி
தெரிவரியதெய்வத்துக்கரசுநம்பிசீரமரு
மரியைவிடாதேத்துசிறுபுள்ளூராவுடைப்பிள்ளை. (உ0எ)

கோதிலாதகோமடத்துக்குலவுதிருவிண்ணகரப்பன்
வேதம்வல்லதிருமாலையாண்டான்விளங்குமீசாண்டான்
ஓதுந்தெய்வவாரியெனவுரைக்குமாண்டான்றிருமோகூர்க்
காதும்வினைகளறக்கடிந்தவப்பன்கச்சிநம்பியொடும். (உ0அ)

வேறு.

வானமாமலையாண்டான்மாறனேரி
மறுவறுசீர்ப்புகழ்நம்பிமாயவஞ்ச
வூனமிலாவாளவந்தாராழ்வார்பின்னு
மோங்குதிருமோகூரில்நின்றார்குன்று
மானமுடைத்திருக்குருகூர்த்தாசர்மிக்க
வகுளாபரணச்சோமாசியாரும்
தேனமருந்தொடைத்தெய்வப்பெருமாளன்றித்
தென்திருமாலிருஞ்சோலைத்தாசர்சீரார். (உ0கூ)

அன்புடையாட்கொண்டியம்மங்கிசிய
ராண்டான்மற்றிவராதியனந்தமேலோர்
இன்பமுறவாசரித்தாராளவந்தா
ரிவர்களுக்காங்கெண்ணருஞ்சீர்மணக்கால்நம்பி
முன்புதமக்கருளியசீர்த்தெரிசனார்த்த
முறைமுறையேகட்டுரைத்தம்முதல்வரோடுந்
துன்பகலுந்திருவரங்கநகருள்வைகித்
துலங்கினாரகல்விசும்பிற்சுடரோனென்ன. (உகo)

### வேறு.

மருவுசீராளவந்தாரவ்வணம்வாழக்கண்டு
திருவுளமணக்கானம்பிசீர்பெறமகிழ்ந்துசெப்பும்
இருவினைத்தொடர்ச்சியற்றுயின்னுமோருண்மையுண்டு
குருகைகாவலவனப்பனிடத்தினிற்கொள்கவென்ன. (உகக)

அந்தவாறறையக்கேட்டவாளவந்தாருமேலாஞ்
சிந்தையுண்மகிழ்ந்துநின்றுதேவரீர்க்கந்தவுண்மை
முந்தைநாளின்மையானமுறைமையையருள்கவென்ன
உந்தையார்தந்தையெங்களுய்யக்கொண்டாருக்கந்நாள். (உகஉ)

இன்றுநானுனக்குச்சொன்னவிராசியத்திரயந்தன்னை
நன்றிசேரருளினல்கிஞானயோகத்தையன்பின்
ஒன்றியகுருகைகாவலப்பனுக்குரைத்தானீதம்
மன்றலந்தாராற்கில்லைமற்றவையெங்கட்கில்லை. (உகங)

ஆங்கவையெதனுலென்னிலவனியாண்மன்னன்றேவி
தாங்கியகருப்பமுற்றித்தாணியிற்பிறக்குமுன்னே
ஓங்குவானடையுங்காலமுறத்தனதுடைமையெல்லாம்
பாங்கொடோர்தலத்தில்வைத்தல்பழுதெனப்பலவைப்பாக. (உகச)

வைத்துவானடைந்துதான்றன்மதலைக்கப்பொருளையெல்லாங்
கைத்தலஞ்சேரும்வண்ணங்காரணங்காட்டல்போல
மெய்த்தசீருந்தைதந்தைவேதத்தின்முடிவையெல்லா
மித்தலத்துநிப்பைசீயென்றியரவுநின்னிடத்துநல்க. (உகரு)

### வேறு.

சொல்லிப்பலவும்பலரிடத்திற்ருேன்றவைத்துச்சுருதிதொழும்
அல்லிக்கமலக்கண்ணெம்மானயோத்திவேந்தன்றிருமகனும்
வில்லிக்கரசைமிகப்பூண்டுவிளங்கும்பரமபதம்புக்கான்
நெல்லிற்கமலஞ்செறிகுருகைமாறனருளால்நிகரில்லாய். (உகசு)

### வேறு.

என்றுரைப்பவாளவந்தாரெழுந்திருந்துதெண்டனிட்டு
நின்றருளக்குருமணியுநிகரில்லாயிப்பொழுதே
சென்றதுகேட்டிடுகவெனச்செப்பிவிடைகொடுத்தருள
மன்றல்கமழ்திருத்தாரான்மறுவறுசீர்த்தொண்டரொடும். (உகஎ)

சீராருமாளவந்தார்திருவரங்கநகர்நீங்கிக்
காராரும்பொழில்புடைசூழ்கங்கைகொண்டசோழபுரத

தோரும்யோகத்திலினிதமருமப்பனிடை
ஆராதகாதலராயந்நகருட்சென்றடைந்தார். (உகஅ)

அந்நகரிலொருகுகையுளமர்ந்திருந்தவப்பனைக்கண்
டுன்னருஞ்சீராளவந்தாருற்றிறைஞ்சிமுன்னின்றால்
மன்னுமிவர்சமாதிகுலைந்திடுமென்னமனத்தெண்ணிப்
பின்னின்றாருடன்சென்றதொண்டரொடுமபேச்சொடுங்கி. (உகக)

வேறு.

அப்படியோகைகாட்டாதடங்கியங்கிருந்தகாலை
யொப்பருங்குருகைகாவலப்பனுள்ளுணர்விற்கண்டிங்
கிப்படிதன்னிற்சொட்டைக்குலத்தவரிருந்துளாரிற்
செப்புமினெனக்குப்பின்னேசெறிந்தவர்யாவரென்றான். (உஉ0)

என்றவராருளிச்செய்யவெலையறமன்பிற்சென்று
நின்றவரடியேனென்னநிலத்துறவணங்கியெந்தாய்
இன்றுநானணைந்ததன்மையெவ்வணமறிந்தாயென்றான்
அன்றதுகேணீயென்னவப்பனுநவிலலுற்றான். (உஉக)

கருமுகில்வண்ணனென்னுட்கலந்தநாட்கமலவல்லி
திருமுலைத்தடங்களாலேசேர்த்துறவணைத்தாளன்னாள்
அருண்முகம்பாராதென்னோடனுபவித்தொழுகிவாழும்
பொருவிலாமாயன்முக்காற்புண்ணியக்கொழுந்தேயன்னாய். (உஉஉ)

பின்புநீநிற்றலாலென்பிடரியையடக்கிப்பின்னே
யின்புறப்பார்ப்பான்மீண்டுமிருப்பனக்கொழுவன்கண்ணன்
அன்பமற்றவைதான்சொட்டைக்குலத்தவர்க்கன்றிச்செய்யான்
என்பதையறிந்தம்மேலோரெய்தினருளரோவென்றேன். (உஉ௩)

என்றவராருளிச்செய்யவியமுனைத்துறைவர்கேட்டாங்
கன்றதில்வியந்துமுன்சென்றப்பனதடியிற்றாழ்ந்து
நின்றடியேனுக்கிந்தயோகத்தைநிகரிலாதாய்
இன்றருள்செய்யவேண்டுமெனப்பலகாலுமேத்த. (உஉ௪)

அப்பனுமதுகேட்டாங்கேயாளவந்தாரைநோக்கி
ஒப்பிலாயவணஞ்செய்வேனுடனுறைந்தவர்களோடும்
இப்பொழுதேதகிநீயுமின்னமாதத்திலின்ன
செப்பமார்தினத்திலின்னகடிகையிற்சேர்கவன்றே. (உஉ௫)

### வேறு.

எனக்கும்பரமபதமன்பாலெந்தைநாதமுனியருள்வன்
உனக்கன்றவன்முன்னெனில்வைத்தயோகந்தனையுமுரைக்கின்றேன்
புனத்தண்டுழாயானருண்மிக்காய்போதியென்னவந்நாளே
மனத்தினினைந்துபட்டோலையிட்டுக்கொடுத்தான்மற்றவரும். (௨௨௬)

மீண்டாங்கரங்கநகர்செறிந்துவிளங்குமாறன்றிருவருளும்
ஆண்டாளருளுந்தமையாண்டமணக்கால்நம்பியருளுமுறப்
பூண்டாங்கிலங்கத்தெரிசனத்திற்பிரவர்த்தகராயைம்புலனும்
தீண்டாஞானச்செழுந்திரளுளிருந்தார்திருந்தச்சிலபகல்கள். (௨௨௭)

### வேறு.

ஆங்கொருநாணம்பெருமாளணியரங்கத்திருமுற்றத்தாளவந்தார்
பூங்கமலத்திருவடியிலினிதமருந்தொண்டரொடும்புடைசூழ்ந்தேத்த
ஓங்குதிருவோலக்கமிருந்தருளமகிழ்மாறனுரைத்தபாட்டிற்
பாங்குடையதிருவரங்கத்தரையனான்புருகப்பாடியின்றே. (௨௨௮)

### வேறு.

நடமினோநமர்களுள்ளீர்நாமுமக்கறியச்சொன்னோங்
கெடுமிடராயதெல்லாங்கிளரொளிமுத்தியொக்குந்
தடமுடையநந்தாநந்தபுரத்தினைச்சார்மினென்னத்
திடமுடையாளவந்தார்திருமுகநோக்கிநோக்கி. (௨௨௯)

பாடினார்பலகால்நம்மைப்பார்த்திவையருள்செய்கின்றார்
ஏடவிழ்வகுளத்தாரானிவரெனவாளவந்தார்
கூடுதுமாழ்வார்சொன்னநமரொடுங்குறுகியென்னத்
தாடொழுதரியைவாழ்த்திவிடையெனத்தமர்களோடும். (௨௩௦)

### வேறு.

சன்னதிவிட்டன்பர்குழாந்தனைச்சூழவிடைகொண்டு
மன்னுதிருமாளிகைக்குக்காவலாய்மாசில்லாத்
தன்னுயிராந்தேவாரியாண்டானைத்தானிருத்திப்
பொன்னவிருநேமியான்றிருவநந்தபுரநோக்கி. (௨௩௧)

நடந்துதிருமாலிருஞ்சோலைஞானமூர்த்திதனைவணங்கி
யிடங்கொள்கூடனகர்வணங்கியெழிலார்மெய்யந்திருக்கோட்டி
திடங்கொள்சேதுப்புல்லாணிதிருத்தங்கால்நற்றென்புதுவை
தடங்கொள்பொருநைவைகுந்தந்தலையால்வணங்கிவிடைகொண்டு. (௨௩௨)

### வேறு.

வரகுணமங்கைபுளிங்குடியென்றிரண்டும்வணங்கிவானவர்கள்
பரவுந்தெய்வத்தொலைவிலிநன்மங்கலத்தைப்பணிந்தேத்தி
விரவுமருள்சேர்தென்குளந்தைவிரவும்பேரைதொழுதேத்தி
யரவினணைமேற்கோளூரிற்றுயிலும்பரமனடிவணங்கி. (உ௩௩)

சீரார்குருகைநகர்செறிந்துசிறந்தசாமவேதத்தை
யோராயிரமாயருள்செய்தாங்கோங்குமாறன்பூங்கழலை
யாராவன்பிலுறவிருத்தியாதிநாதன்றனைவணங்கிக்
காரார்பொழிற்சீவரமங்கைக்கண்ணன்கழல்கள்கண்டிறைஞ்சி. (உ௩௪)

### வேறு.

ஆசறுமன்பர்திருக்குறுங்குடியிலச்சுதனிணையடிபணிந்து
வாசவன்வணங்குவண்பரிசாரத்திருந்தவர்மலரடியிறைஞ்சிப்
பேசிவானவர்கள்வணங்கும்வாட்டாற்றிற்பிரானடிமுடிமிசைதரித்துத்
தேசுறுமநந்தபுரநகரடைந்தான்செண்பகமாறனுக்கினியான். (உ௩௫)

### வேறு.

செங்கமலத்தயன்பணியுந்திருவநந்தபுரநகரைப்
பங்கமிலாவன்பரொடும்பணிந்திறைஞ்சிவலஞ்செய்து
கொங்கலர்தண்டுழாய்முடியான்கோயிலையும்வலஞ்செய்தங்
கங்கமெலாங்கரைந்துருகியாளவந்தாருள்புகுந்தார். (உ௩௬)

உட்செறிந்தவாளவந்தாருலகேழுமுண்டுறங்காக்
கட்செவியிற்கண்வளருங்கருமுகிலையுறநோக்கி
யெட்செறியுமெண்ணெயெனயாவினுளுங்கலந்திருந்த
புட்செறியுந்தனிப்பாகாபோற்றிசயசயபோற்றி. (உ௩௭)

செங்கமலத்தயனாற்குஞ்செனகன்முதன்முனிவருக்குந்
தங்கடங்கணிட்டைகொடுசாற்றுதற்குமரியவனே
யெங்குமிருவினையேனென்றிடப்பட்டேற்கெளியவனே
பொங்குகடலடைத்தவனேபோற்றிசயசயபோற்றி. (உ௩௮)

தேனமர்பூங்குழலாயர்சிறுமியர்கள்பின்றொடர
மானமரும்விழிப்பின்னைமனந்தொடரத்தினந்தொடர்ந்து
கானமர்வேய்ங்குழலூதிக்கற்றுவின்பின்றொடர்ந்து
போனவனேகருமணியேபோற்றிசயசயபோற்றி. (உ௩௯)

ஒங்குமொளிமயமாகியுலகேழுநிறைந்தவற்றைத்
தாங்குமுடலுயிராகித்தானவராய்வானவராய்த்
தேங்கமழ்பூம்பொழில்புடைசூழ்திருவநந்தபுரத்தில்வளர்
பூங்கமலக்கண்ணனேபோற்றிசயசயபோற்றி. (உ௪0)

என்றிவணம்பற்பலகாவின்சொல்பெறவெடுத்தேத்தி
மன்றல்கமழ்பாதாதிகேசம்வரைமாமாலை
யொன்றியுடனனுபவித்தாங்குடன்சென்றதொண்டரொடும்
அன்றமுதற்சிலபகல்களங்கரிலினிதமர்ந்தார். (உசக)

இப்படிசிலநாள்செல்லவீங்கிதிலொருநாளந்த
ஒப்பிலாவாளவந்தாருடனுறைபவர்களோடும்
அப்பன்முன்னிட்டுத்தந்ததிருமுகத்தவதியின்னே
தப்பறநோக்கவேண்டுந்தருமினிங்கதனையென்றார். (உசஉ)

நன்றெனவவர்களன்றேநல்கினாரதனைநோக்க
மன்றல்சேர்மாலைமார்பன்வரச்சொல்லியருளுநாளும்
அன்றதாயிருப்பக்கண்டவாளவந்தாரும்வாடி
இன்றுநாஞ்சேர்தற்கிங்கோர்புட்பகமிலதேயென்ன. (உசங)

வருந்தியப்பொழுதேதாமுந்தொண்டருமாவாய்கீண்டு
குருந்தமர்ந்திருந்தசோதிக்கொண்டலையிறைஞ்சியப்பன்
இருந்தவப்பதியைநோக்கியேகினாரேகுங்காலைத்
திருந்தமுன்பிடத்தில்வைத்ததேவாரியாண்டானென்போன். (உசச)

தனையுவந்தினிதினண்டதலைவனைப்பிரிந்துமுன்போர்
தினையினதளவும்வாழான்சிலபகற்பிரியத்தாளும்
வினையறுமுகமுமெய்யும்வீங்கிடவெப்பமுற்றங்
கெனையவன்பக்கற்கொண்டின்றேகுமினென்னவாங்கே. (உசரு)

இருந்துளார்தமக்குச்செப்பவியமுனைத்துறைவராய
மருந்தினைக்காட்டியிந்தவன்பிணிகளைவோமென்னத்
திருந்தியப்பொழுதேதாங்கித்தேவாரியாண்டான்றன்னை
யருந்தவப்பயனிற்றோன்றுமாளவந்தார்க்குநேரே. (உசசு)

சென்றனர்சிலர்கள்கொண்டுதேவாரியாண்டான்றன்னை
நன்றிசேரனந்தாநந்தநற்பதிக்கணித்தோர்கூப்பீ
டென்றிவரணைவராங்கேயியமுனைத்துறைவர்தாமுந்
தன்றுணைத்தொண்டரோடுஞ்சார்ந்தனரெதிரேசார. (உசஎ)

இருநுகண்களாலேதேவாரியாண்டான்கண்டான்
வருறுமாளவந்தாராகியவின்பவெற்பைப்
பாருறப்பணிந்தான்வீங்கும்பாதத்தான்முகத்தான்மெய்யால்
ஆரிவரென்றார்நின்றாராளவந்தார்க்குச்சொல்வார். (உசஅ)

தேவரீர்தம்மைநீங்கித்தேவாரியாண்டானிந்தப்
பாவகமடைந்தான்காண்கவென்றவர்பகருங்காலை

மூவகையுலகுமேத்துமியமுனைத்துறைவர்நோக்கி
ஏவரேயிதுசெய்வார்களிங்கிவரன்றிமுன்பில். (உசக)

வென்றிசேரிராமன்பக்கல்மேவியகுரத்தாலும்
நன்றிசேர்சுதந்திரத்தினற்பொருளமைதலாலும்
அன்றவன்சொல்லைப்பேணிப்பாதனுங்கமைந்தானென்பால்
இன்றிவையிரண்டுமில்லையென்பதையறிந்துநீரும். (உருo)

இருத்தியதலத்தில்வைகாதேகினீரென்றூர்கேட்டு
வருத்தமுற்றடியிற்றாழ்ந்தார்வந்ததுசொரூபஹானி
திருத்தியாட்கொண்டாற்காகாச்சென்மமோமுடிந்ததென்னக்
கருத்தினிலயர்ந்துமீளவெழுந்திலன்காதன்மிக்கான். (உருக)

ஆங்கதுகண்டுநின்றூரிளகுமென்றருளிச்செய்ய
ஓங்குசீராளவந்தாருரைப்பாவ்விரண்டுமென்பாற்
பாங்குடனுளதென்றிந்தப்படியுளோர்க்கறிவித்தன்றி
யீங்கிவரிளகாரென்றூரீடழிந்திளகிநின்றூர். (உருஉ)

நின்றவர்தம்மைநோக்கிநிகரிலாவாளவந்தார்
இன்றிதோரதிகாரந்தானிருந்தமைகாண்மினென்ன
அன்றுடனின்றூர்க்கெல்லாமருளியாண்டானைநோக்கிச்
சென்றுறத்தழுவிக்கொண்டார்வீக்கமுஞ்சிதைந்ததன்றே. (உருங)

வேறு.

வண்டுபடுதுழாய்முடியான்மலரடியைப்பிரியாதார்
பண்டுமூளரனந்தம்பேரின்றுமுளர்பாகவதர்
தெண்டிரைசூழ்மன்னுலகிற்றேசிகன்பாலன்புடையார்
உண்டுகொலோதேவாரியாண்டானையொத்தாரே. (உருச)

வேறு.

அப்படிநின்றவன்பனைநோக்கியாளவந்தாருரைத்தருள்வார்
ஒப்பிலாயநந்தபுரத்தினிற்கீழைக்கோபுரம்விசும்புறவோங்கி
இப்பொழுதிங்கேகாணலாம்படிநின்றிட்டதுபொட்டெனச்சென்று
தப்பறவணங்கிவருதியென்றறைந்தான்றன்னைநான்றுதிசெயத்தந்தான். ()

பன்னருஞ்சீராளவந்தார்புகர்ந்தவுரைசெவிபுகலு
மென்னுடையதிருவநந்தபுரமிதுவென்றிணையடியைப்
பின்னுமுறவிழுந்திறைஞ்சிமுன்போகப்பின்போனன்
மன்னுலகிற்சிட்டர்களிற்சிகாமணியாமதிமிக்கோன். (உருசு)

வேறு.

இப்படியாளவந்தாரிணையடிபிரியில்வாடும்
ஒப்பிலாவன்பசீராடுமோங்குசீர்க்குருகைகாவ

லப்பனென்செய்தானென்னவாய்ந்தனனந்நாளிற்
செப்பமார்பரலோகத்திற்செறிந்தமையறிந்துசிந்தை. (உருஎ)

வேறு.

வருந்திநாதமுனிவைத்தவைப்புத்தப்பிற்றந்தோவென்
றிருந்துவருந்தியத்தலம்விட்டன்பர்தேற்றவெழுந்துமுனங்
குருந்திலேறுங்குடக்கூத்தன்கோகனகச்செங்கமலையொடும்
பொருந்திவளரும்பொன்னரங்கம்புக்காரமரர்புகழ்ந்தேத்த. (உருஅ)

வேறு.

அந்தவகைசெறிந்தரங்கநகரணைந்தவாளவந்தார்
சிந்தையுறநம்பெருமாடிருவடிகளுறவணங்கி
எந்தைமணக்கால்நம்பியிருந்ததலம்புகுந்திறைஞ்சி
முந்தைமறைதொழுதேத்துமுதலோனைமுன்னிலையாய். (உருகூ)

எண்ணருஞ்சீர்நயிச்சியத்தாவிலங்கியசீர்ச்சராசரங்கள்
உண்ணெகிழ்ந்துநீராளமயமாகியுடலுருகப்
பண்ணமருந்தோத்திரங்கள்பலபகர்ந்தாராளவந்தார்
விண்ணவருமுருத்திரனும்விரிஞ்சனுங்கேட்டுளமகிழ்ந்தார். (உசு0)

வேறு.

அப்படிவாழுநாளிலாசறுமணக்கானம்பி
செப்பருமுய்யக்கொண்டார்திருவடியிணையிற்சேர்ந்தார்
ஒப்பருமாளவந்தாரங்கதிலுள்ளம்வாடி
யப்பவென்னமுதேயென்னவழுதலமந்துசோர்ந்து. (உசுக)

ஆங்கவர்க்குறுகடன்களானவையனைத்துஞ்செய்திட்
டேங்கியாங்கிருப்பப்பின்னுமீச்சுரமுனியுந்தந்தை
பூங்கழலடைந்தானந்தப்பொருவிலாநிலையினனுக்
கோங்கியகடன்களெல்லாமொன்றொழியாதுசெய்தே. (உசுஉ)

தன்னையடைந்தமுதலிகளுந்தானுஞ்சிலநாளங்கிருப்ப
முன்னைவிதியின்பயனாலேமூப்புத்தோன்றமுதலிகளோ
டென்னையாளவந்தபிரானியம்புமெற்பின்னின்பமுற
மன்னுமிந்தத்தெரிசனத்திற்பிரவர்த்தகராய்மாநிலத்தில். (உசுங)

தோன்றக்காணேமொருவரையுமென்றுமிகவுந்துன்புற்று
மூன்றுகுணமுங்கடந்திருக்கின்முடிவிலிருக்குமுதல்வனிடை
யூன்றுஞ்சிந்தையுடையவருமுலைவாய்வைத்தமெழுகுருவம்
போன்றுகலைந்துசிலபகல்கள்செல்லுநாளப்பொருவில்லான். (உசுச)

ஆளவந்தார் வைபவம் முற்றிற்று.

——— உதவிப்பத்திராதிபர்.

உ

# கம்பராமாயணக்கவுத்துவமணிமாலை.

—:0:—

1. கம்பன் என்னும்ஓர் காளமே கம்தமிழ்
அம்பு ராசிஅு டங்கலும் மொண்டுவான
பம்பும் ஆரிய மாம்இம யம்படிந்
திம்பர் நாட்டிற் கிறைத்ததண் வாரியே.

கம்பன் என்னும் (இயற்கை வளம் நிறைந்து) இருண்ட ஒருமேகம் (பயிற்சிவளம்கொள்ளுமாறு) எழுந்துசென்று தமிழ் இலக்கிய இலக்கணக்கடலை முற்றிலும் உண்டு அதனோடு அமையாது வானம் அளாவி ஓங்கிநிற்கும் வடமொழியாகிய ஸம்ஸ்க்ருதம் என்னும் இமயமலையிற் சென்றுபடிந்து (ஆங்குச் சூல் முதிர்ந்து) இந்நாட்டுள்ளார் அனைவரும் பருகித் தழைக்கும்வண்ணம் பொழிந்த குளிர்ச்சியான மழைத்தாரையாகும் (இக்கம்பராமாயண மகாகாவியம்.)

குறிப்பு:—மஹாகவியாகிய கம்பன் தமிழிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் ஆழ்ந்தகன்ற பாண்டித்தியமுடைய ஒரு பெரும்புலவன் என்ன இங்குக் குறிப்பிடப்படுகின்றது.

2. "தேவ பாஷையில் இக்கதை செய்தவன்"
யாவனோ அவன் பாவெனும் ஆவிநின்
றேவில் ராமன் தமிழ்க்கதை யாறெழுந்
தோவில் தெக்கணம் எங்கும் உலாயதே.

வடமொழியில் இந்த ராமகதையை இயற்றிய பெரும்புலவனும் வான்மீகிமுனிவனுடைய கவி என்னும் தடாகத்தில்நின்றும் உற்பத்தியாகி, கூரிய அம்பொடு கோதண்டம் என்னும் வில்லைத்தரித்த ஸ்ரீராமனுடைய தமிழ்க்கதையாகிய ஆறு அழிதலில்லாத தென்தேசமாகிய தமிழ்நாடெங்கும் பரவிப்பாயாநின்றது.

3. கம்பம் வேய்ந்த குடில்வை கு வார்மணிக்
கம்பம் வாய்ந்த பொன் மாளிகை கண்டவா
கம்பன் தீந்தமிழ் உண்டு கரசிரக்
கம்பம் செய்து கவிஞர் களிப்பரால்.

(புல்லிய) கம்புகளினால் தெற்றப்பட்ட குடிசைகளில் இதுவரையும் வசித்துவந்த தமிழ்க்கவிஞர் மாணிக்கத்தூண்களால் தாங்கப்பெறும் பொன்மாளிகை ஒன்றினுட் புகுவாராகில் அவர் எத்துணைமகிழ்ச்சியும் ஆச்சரியமும் அடைவார்களோ அத்துணை மகிழ்ச்சியும் ஆச்சரியமும் கம்பனுடைய இனிய தமிழ்ப்பாவைப்பருகுவதனால் அடைந்து அவ்வுணர்ச்சிகளைத் தமது தலை அசைத்தலாலும் கைகொட்டலினாலும் வெளியிட்டு உலகத்தார் அறிந்துகொள்ளும்படிசெய்வர்.

4. காமர் பூவுதிர் கற்பகக் காக்கொலோ?
பூமகள் செவ்வி பொங்கும் பயோதமோ?
நாமகள் மெய்ந் நடம்செயும் ரங்கமோ?
பாமகார் பதி கம்பன்நற் பாடலே.

கவிஞர்கள் தம்மாசெனப்போற்றும் கம்பன் இயற்றிய இக்கம்பராமாயணத்தை அழகிய பூக்களைச் சொரிந்துநிற்கும் ஒரு கற்பகக்காவோடு ஒப்பிடுவேனோ? அன்றி, இலக்குமிதேவியினுடைய ஐசுவரிய அழகு பெருகித்ததும்பும் பாற்கடலோடு ஒப்பிடுவேனோ? அன்றி, சரஸ்வதி தன்முழுமேனியும் இலகநின்று நடனம்செய்யும் ஒரு நாடகசாலையோடு ஒப்பிடுவேனோ?

5. வான யாறு மடுத்தப்ர வாகமோ?
கான யாறெனும் கங்கை திரண்டதோ?
தேனிறால் நனி சிந்துலும் சிந்தென்ப
தேன்? இரா தமு தத்தும் இதன் சுவை.

(அன்றி, இக்கம்பராமாயணத்தை) ஆகாசகங்கை பொங்கிவழிந்த ஒரு பெருவெள்ளத்தோடு ஒப்பிடுவேனோ? அன்றி, அடவிவழி ஊடுருவிச் செல்லும் கங்காநதியின் திரண்ட ஜலப்பெருக்கோடு ஒப்பிடுவேனோ? (தேனினு மினிய) தேவாமிர்தத்திலும் இதனுடைய இனிமை இல்லாதிருக்கும்பொழுது தேன்கூண்டுகள் இனியதேனைச்சிந்தப் பெருகின ஒரு தேன்கடலோடு ஒப்பிடுவது பயன் தராத உவமையேயாம்.

6. வேரி மாமணம் வீசும் தமிழணங்
காரும் ஆரமோ? ஆய்முத்தின் ஆரமோ?
பாரில் வானில் பயில்அழ குமஎழில்
சேரப் பூணும் செழுமணிப் பேழையோ?

(அன்றி, இக்கம்பராமாயணத்தைத்) தேனையும் பெருமைபொருந் திய மணத்தையும் வீசுவதும் தமிழன்னை (தன்குழலில்) முடிப்பது மாய ஒரு பூவாரத்தோடு ஒப்பிடுவேனோ? அன்றி, அம்மாதா ஆய்ந் தெடுத்து (த்தன்மார்பில்) அணியும் ஒரு முத்துவடத்தோடு ஒப்பிடு வேனோ? அன்றி, உலகத்தினிடத்திலும் வானத்தினிடத்திலும் நிரம் பிய அழகெல்லாம் (திரண்டு ஓர் உருவாய பாவை) தன்னை அலங் கரித்துக்கொள்ளப் பூணும் இரத்நாபரணங்களைச் சேமித்துவைக்கும் ஒரு பெட்டியோடு ஒப்பிடுவேனோ?

7. ஓசை இன்பம்ஓர் ஊற்றெடுத் தேமனம்
மாச யின்றிடா வாறு வருதலால்
பூசை இன்பப் புனிதர்க்கும் மேற்புலன்
ஆசை இன்ப அமுதினை ஊட்டுமால்.

(இக்கம்பராமாயணக் கவியில் அமைந்த அழகிய) ஓசையினால் வரும் இன்பம் ஒரு ஊற்றெடுத்துப் பாய்ந்து (மனிதர்களுடைய) மனதில் அழுக்கே படியாதவண்ணம் (அதனைப் புனிதமாக்கிச்) செல்லுவ தால், (சரீர இன்பங்களைப் புல்லியவெனத் தள்ளித்) தெய்வவணக்கமே தமக்கு இன்பமாகக் கருதும் பரிசுத்த மஹான்களுக்குங்கூடக் கண் காது எனும் இரண்டு உயரிய கலைப்புலன்வழி பருகும் இன்னமுதப் பாய்வில் அஃது ஆசையை உண்டுபண்ணுநிற்கும்.

8. கூறில் அண்டரும் கொண்ட அமுதினால்
ஈறில் வாழ்க்கையை எய்தின ரேனும்கைம்
மாறில் லாமகிழ் மீறுகம் பன்கவிப்
பேறிலா தின்றும் பேதுற் றழுங்கினர்.

(இவ்வுலகத்தாரையும் வானுலகத்தாரையும் ஒப்பிட்டுச்) சொல்லு மிடத்து தேவர்கள் தாம் பெற்றுக்கொண்ட அமிர்தத்தினால் மரண மில்லாப் பெருவாழ்க்கையை அடைந்தனரேயாயினும், (இவ்வுலகத்தார் பெற்றுக்கொண்டதுபோல்) அவ்வாழ்க்கையை மகிழ்ச்சியாற் சிறப் புறும்படிசெய்யக் கம்பனுடைய காவியம் என்னும் பெருஞ்செல்வத்தைத் தாமும் பெற்றுக்கொள்ளவில்லையே என்று இன்றும் மனம் குழைந்து அலக்கண் உறுகின்றனர்.

9. பூவின் மென்மை பொலிவற் றிழிவது,
காவின் தண்மை கனன்று தெறுவது,
கோவின் தேசெதிர் கூசிக் குலைவது,
பாவிற் பாவெனும் கம்பன்மெய்ப் பாட்டினால்.

உண்மையான கவியினிமை ஒழுகிக் கவிக்குட்கவியாய்விளங்கும் கம்பன்கவித்தொகையின்முன்னிலையிற் பூவின் மெல்லியகுணமும் அழகவிந்து கீழடைகின்றது; செறிமரக்காவின் குளிர்ச்சியும் கொதித்துச் சுடாநிற்கின்றது; விலையுயர்ந்த இரத்தினங்களின் ஒளியும் ஒளியிழந்து மழுக்கம் அடைகின்றது.

குறிப்பு:—"மெய்ப்பாட்டினால்" என்னும் தொடருக்கு உத்தம கவிஞனும் கம்பன் தன்னுள்ளக்கருத்தை அல்லது மனதிற் கற்பிதம் செய்பொருளைத் தன்கவியை வாசிப்போருக்கு அதில் நிரப்பும் சொற்களினாற் கண்கூடாதல்செய்யும்வல்லமையும் பெற்றுவிளங்கினன் என்றும் பொருள்கொள்ளலாம்.

10. பண்ணில் வந்த சுவையையும் பாவைமார்
கண்ணில் வந்த களிப்பையும் ஞானியர்
எண்ணில் வந்தநல் லின்பையும் கம்பன்பா
நண்ணி வந்த நலம்நனி தீய்க்குமால்.

கம்பனுடையகவியோடுபொருந்திவிளங்கும் அழகு, இராகங்களில்நின்றெழும் ஒலியின்பத்தையும், வனப்புவாய்ந்த மாதர்களைக் கண்ணுறுவதாற் பொறிவழிப்புகுந்து பெருகும் இன்பத்தையும் தத்துவஞானிகள் தமது அந்தக்கரணவாயிலாய் அடைந்தநுபவிக்கும் உயரிய இன்பத்தையும், அழகுகெட்டு இன்பிழக்கச்செய்கின்றது.

11. குமுத வாயிற் குழவி மிழற்றுறும்
அமுத தாரை இனிதென் றரைத்தஅவ்
விபுதன் நூலொடும்மெய்ப்பல கைக்கணே
சமனில் நின்று தயங்கத் தகுவது.

குமுதமலர்போலும் இதழ்களுடைய சிறுகுழந்தைகள் குழறும் கொச்சைச்சொற்கள் (குழலினிலும் யாழினிலும்) இனிமையுடையன வென்று கூறிய தெய்வப்புலவர் திருவள்ளுவநாயனார்செய்துள்ள தமிழ்

மறையாகிய குறளோடு சங்கப்பலகையிற் சமனாக நிலவிநிற்கத்தகுதி வாய்ந்துள்ளது இக்கம்பராமாயண மகாகாவியம்.

குறிப்பு:—கம்பராமாயணம்இயற்றப்பட்டகாலத்திற்கு முன்னே கடைச்சங்கம் இறந்துபோயினமையால் இந்நூல் சங்கப்பலகை ஏறு தொழிந்தது எனக்கூறல் மிகையாகாது.

12. அங்கம் சேரும் அவயவ சாலத்துள்
தங்கம் சேரொண்மை சூட்டும் முகமன்றே!
திங்கள் போலும் முகத்திற் கெழில்நலம்
தங்கச் செய்வ சலச விழியரோ!

ஒருடலைச்சேர்ந்த உறுப்புக்கூட்டத்தில் அவ்வுடலுக்கு அழகைத் தருவது முகமே ஆகும்; சந்திரன்போல் ஒளிரும் அம்முகத்திற்கும் அழகைப் பொழிவன ஆங்குத் தாமரைமலர்போல் விகசிக்கும் இரண்டு விழிகளுமேயாம்.

13. பாஷை மாதர் பலருளும் இன்னிசை
ஓசை மாதர் உறும்தமிழ் ஒண்டொடி
வாச வாண்முகம் வாய்ந்த விழியிகம்
ஏசில் ராமன் கதைகுறள் என்பவே.

குற்றமற்ற ராமன்கதை குறள் என்னும் இரண்டுநூல்களையும், உலகத்தில் நின்றுநிலவும் அநேக பாஷைகள் என்னும் அழகிய மாதர்கள் குழுமிய கூட்டத்தில் இனிய ஒலியின்பத்தாற் சொல்லோசையின் அழகு இத்தன்மைத்தென விளக்கிக்காட்டும் தமிழாய அணங்கின் முகத்தில் இன்பாய வாசத்தையும் அறிவாய ஒளியையும் ஊட்டி இலகும் இரண்டு விழிகளென்னச் சொல்லலாம்.

14. காவி யன்றக வினர்பூங் கானரு
காவி யன்றழ காலர் தூவுமங்
காவி யன்றரு வன்றேஇத் தென்கவி
காவி யபணம் கான்றெளிர் கற்பகம்.

(காலதேசவேற்றுமையாலும், மொழிவேற்றுமையாலும் பல்வேறு கவித்துறைவேற்றுமையாலும்) பல தொகுதியாகச் சேர்ந்துநிற்கும்

கவிஞராம் காக்கள் நிறைந்திருக்கும் அழகிய மொழி ஆரண்யத்திற்கு அடுத்துத்தங்கி அழகிய மலர்களைத்தூவி விளங்கிநிற்கும் ஒரு பெரிய தருவென இவ்வெழிற்கலைஞனை யான் ஒப்பிடேன்; இக்காட்டில் நின்றும் மிக்கதூரத்தில் காவியமணம் எக்காலத்தும் வீசிக்கொண்டு நிற்கும் ஒரு நிகரில் கற்பகதருவென்றே அவனை யான் சொல்லத் துணிவேன்.

15. நாமகள் அருள் நண்ணும் வரகவி
ஹோமர் வர்ஜில் மில்ற்றன் னென ஓதுவர்
வாமமார் வடதேச வான்மீகர் தென்
சீமைத் தமிழ்க் கம்பர்த் தெரிகிலார்.

ஸரஸ்வதிகடாக்ஷம்பெற்றுவிளங்கும் வரகவிகள் ஹோமர், வர்ஜில், மில்ற்றன் என்னும் மூவரே என்று மேற்றிசையோர் கூறுகின்றனர்; ஆனால் அவர் அங்ஙனம் கூறுவதற்குக் காரணம் வடதேசத்தில் அழகிய ஆரியப்புலவனும் வான்மீகியையும் தென்தேசத்தில் இனியதமிழ்க்கவி யரசனும் கம்பனையும் அறியாமையேயன்றி வேறன்று.

16. பூமி மாது புனையும் மஹா கவித்
தாம நாப்பண் தயங்கிச் சுடிரொளி
ஏமம் வீசி எரிநடு நாயகம்
காம இன்பமும் கைப்பித்த கம்பனே.

காம இன்பத்தையும் கசப்பென்று தள்ளிவிடத்தக்க இனிமையை ஊட்டும் கவிபுனையும் கம்பன் என்னும் மஹாகவி, பூமிதேவி தன்மார்பில் அணிகின்ற மஹாகவிகளாம் இரத்தினவடத்தில் நடுவேநின்று அழகிய ஒளியையும் இன்பத்தையும் எங்கும் வீசி மிளிர்கின்ற ஓர் நடுநாயக இரத்தினமாக இன்றும் பிரகாசிக்கின்றான்.

நா. ரா. சிவராஜபிள்ளை B.A.,

---

உ

# அநபாய குலோத்துங்கன்.

## விடைக்கு ஒரு மறுப்புரை.

---

பண்டிதர் திரு. L. ஸ்ரீநிவாஸ ஐயரவர்கள் செந்தமிழ் உ௰-ம் தொகுதியில் (௨௭௧—௨௭௫ பக்கங்களில்) வெளியிட்ட அநபாயகுலோத்துங்கன் என்பதையொட்டி, அத்தொகுதியில் (பக். ௩௮௫—௮௮) யான் குறித்துள்ள ஐயவினாக்களைக்கண்டு அவை எனக்குமாத்திரம் உண்டாய ஐயமென்றும் அவற்றுக்குவிடை யான் அவர்களைக் கடிதமூலமாக உசாவித் தெரிந்துகொண்டிருக்கலாமென்றும், மற்றியாருக்கும் அதனில் ஐயமுண்டாவதற்கில்லையென்றும் பொருள்பட எழுதியிருக்கின்றார்கள்.* யான் குறித்தவை சரித்திரஆராய்ச்சியிற் றலையிட்ட ஒவ்வொருவருக்கும் தோற்றியிருக்கின்றனவென்று ஐயரவர்கட்குத் தெரிவித்துக்கொள்கிறேன். அன்றியும், புதியதாகச்சொல்லப்படும் எந்த விடயமும் நன்றாக ஆராயப்பட்டாலொழிய நிலைபெறாது. ஆகவே ஒருவிடயத்தை ஆராய்வதால் அது உண்மையாயிருக்குமாயின் வலிபெறுமேயன்றி மெலிவுறாது.

(1) அநபாயகுலோத்துங்கன் என்பது சாரைப்பாம்பு என்பதுபோல இருபெயரொட்டுப்பண்புப்பெயராய் நிற்கும். சாரையாகிய பாம்பு என்பதில் எவ்வாறு சாரையென்பதில் அது பாம்பினத்திற் சாரைவகையைக்குறிக்குமோ அஃதேபோல ஈண்டும் அநபாயனாகிய குலோத்துங்கன் என்று முடியுமேயன்றி அநபாயன் குலோத்துங்கன் என்ற பெயர்களையுடையான என்ற பொருளைத் தராது. படிப்போரும் அவனது இயற்பெயர் அநபாயன் என்று மயக்கமடைவர். அவ்வாறு மயங்காமைப் பொருட்டே அநபாயன், அபயன், குலோத்துங்கன், சென்னியென்று சேக்கிழார்சுவாமியும் கூறினர் என்று தோன்றுகிறது. அந்தக் கருத்தைப் பின்பற்றியே மற்றையோரும் கூறினர். ஆகலான் அநபாய குலோத்துங்கனென்பது வேறொருபொருள் பயத்தலின் அவ்வாறுகொள்ளுதல் அமைவுடையதன்றென்பேன். அன்றி, அவர்க்கு

---

*இவ்விருபத்தாறாந்தொகுதியின் 11—13 பக்கங்கள் பார்க்க.

அது இயற்பெயரென்று தக்க ஆதாரங்கொண்டு சாதிப்பார்களாயின் என்பிழையை யொப்புக்கொள்ள என்றும் பின்வாங்கமாட்டேனென்பதும், அவர்கள்மாட்டு நன்றியறிதலுமுடையேனுவேனென்பதும் திண்ணம்.

(2) அவர்களது மூன்றாவதுகுறிப்பிலே ஐயங்கொண்டார் பல பெயர்களையுங்குறிக்கவேண்டுமென்ற நியதியில்லையென்றார்கள். யான் எழுதிய குறிப்பிலே 'ஐயங்கொண்டார் பாணியிலே இப்பெருஞ்சேதியைக் குறிக்காத தெதனைமுன்னிட்டென்று விளக்கவும்வேண்டும்'* என்று குறித்துள்ளேன். ஆண்டு யான் கருதிய பெருஞ்சேதி பெரியபுராணம் பாடிய, பாடச்சொன்ன விடயங்களை. அதனை விளக்கமாக எழுதாதது ஒரு தவறேயாகும். அவ்வாறெழுதியிருந்தால் ஐயரவர்கள் இவ்வாறு கொண்டு எழுதக் காரணமில்லை.

இனிக் கலிங்கப்போர்வெற்றி பெரியபுராணம்பாடுவதற்குமுன்னென்றும், பரணி முன்னரே பாடப்பட்டதாகுமென்றும் கூறுவாராகளாயின், இச்செய்தியை ஆசிரியர் சேக்கிழார் குறிக்காதுவிட்டதென்னையோ? இஃதன்றி நம்பியாண்டார்நம்பி எந்தெந்த இடங்களிற் சோழவரசனைப் பாராட்டியிருக்கின்றனரோ அந்தந்த இடங்களிலேயே நமது சுவாமிகளும் மேம்படக்கூறியுள்ளாராகலின, இவர்காலத்துச் சோழனைக் கூறியதாகக் கொள்வது பொருத்தமாகத் தோற்றவில்லை. நம்பி குறிக்காது இவர்களாகக் குறித்த இடம் ஒன்றிரண்டேயாம். இவைகளாலே இப்பெருஞ்செய்தி குறிக்கவில்லையென்றேன்.

(3) தொண்டர்சீர்பரவுவார் வீராரஜேந்திரன்காலத்தவரென்று யான் தெரிந்துகொள்ளச் சாதனமாயிருந்தது இவர்களது உரைநடை நான்காம்பகுதியேயாம்.

அதனை ஈண்டு அப்படியே குறிக்கின்றேன்.—

மேலும், கோயம்புத்தூர்ஜில்லா தர்மாவரம்தாலூகா முத்தூரிலுள்ள சோழீச்சுவரர்கோயிலிற் காணப்படும், முதற்குலோத்துங்கனுக்குமுன் ஆண்ட சோழஅரசன் வீரராஜேந்திரதேவனது 4-வது

* செந்தமிழ்த்தொகுதி XXV பக்கம் ௩அ௬.

வருஷசாஸனத்தில் (165 of 1910) பெரியநாச்சியார்கோயிலில் ஒரு திருவிளக்கு வைக்கும்பொருட்டு உத்தமசோழப்பல்லவரையன் என்பவனது மைந்தர் ஒருவரால் ஏதோ ஒருதொகை பணம் கொடுக்கப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

**சேக்கிழாருக்கு ஆதியிற் சோழமன்னன் ஒருவனால் உத்தம சோழப்பல்லவராயர் என்ற பட்டம் அளிக்கப்பட்டதென்பது முற்கூறிய சேக்கிழார்புராணத்தால் அறியலாகும். இதனால் சேக்கிழார்மைந்தர் ஒருவரே முதற்குலோத்துங்கனுக்குமுன் ஆண்ட வீரராஜேந்திரனதுகாலத்தில் இருந்தவராதலால் (அவரால் மேற்கூறிய தருமம் ஏற்படுத்தப்பட்டமையால்) அந்த வீரராஜேந்திரனுக்குப்பின் முதற்குலோத்துங்கனே ஐம்பதுவருஷங்களுக்கதிகம் ஆண்டிருக்க, முதற்குலோத்துங்கனதுமைந்தன் விக்கிரமசோழன் பிறகு அவன்மைந்தன் இரண்டாங்குலோத்துங்கன், இவர்களது ஆட்சிக்காலங்களிலெல்லாம் சேக்கிழார் வாழ்ந்துவந்து இரண்டாங்குலோத்துங்கனதுகாலத்திற் பெரியபுராணம் பாடியிருக்கவேண்டுமென்று கொள்வது பெரிதும் அசம்பாவிதமாகும்.**

மேற்குறித்த பிற்பகுதியிற்காணப்படும் விஷயங்களாற் சேக்கிழார் மைந்தர்காலமே வீரராஜேந்திரனதுகாலமாகுமென்றால் அவனதுபிதாவாகும் உத்தமசோழப்பல்லவராயர்காலம் அதற்குமுன்னர் என்பது சொல்லாமலே விளங்குகின்றதென்பதை ஐயரவர்கள் மறுக்கமாட்டார்களென்றே கூறுவேன். இப்பகுதியிலே யானுகக்குறித்ததொன்றுமில்லையென்பதும் ஐயரவர்கள் சொன்னவற்றையே திரும்ப என் வாசகத்தால் தெளிவுபெற எழுதினேனென்பதையும் தெரிவித்துக்கொள்வதற்கு மன்னிக்க வேண்டுகின்றேன்.

(4) திருநீற்றுச்சோழன், கோநேரின்மைகொண்டான் முதலான பெயர்கள் பொதுப்பெயர்களாதலின் அப்பெயர்கள் முதற்குலோத்துங்கனுக்கு உண்டானகாலமெது?; அவை யெவ்வாறு பொருந்தும்? என்று காட்டவேண்டுவது ஐயரவர்கள்கடமையாகவிருக்க அவர்கள் அதனை விட்டுப் பிறகூறுவது செடிசுற்றுங்கதையாயிருக்கிறதென்று பின்னுமொருமுறை கூறுவதற்காக வருந்துகின்றேன்.

அநபாயன் என்றபேர் பொதுப்பெயர் என்றும் அதனை இரண்டாங்குலோத்துங்கனும் கொண்டான் என்றும் பொதுப்படக்கூறுவதில்

இவர்கட்கும் ஆக்ஷேபமில்லையாயினும், பெரியபுராணத்திற் கூறும் அநபாயனே முதலாங்குலோத்துங்கன் என்பதற்குற்ற ஆதாரங்களை வலி பெறுமாறு கூறவில்லையென்பதே எனதுகுறை. (1) அநபாயன் என்ற பேரை முதலாங்குலோத்துங்கன் எந்த ஆண்டிற்கொண்டான்? (2) பெரியபுராணத்திற் காணப்படும் அநபாயனும் இவனும் ஒன்று என்று கொள்வதற்குற்ற மறுக்கொணாச்சான்றுகள் யாவை? என்று நிலைநாட்டவேண்டுவது ஐயரவர்கள் கடமையாகும்.

இலக்கணவிளக்க ஆசிரியர் பரம்பரை,

திருவாரூர்ச் சோமசுந்தரதேசிகன்.

---

# திருச்செந்தூர்க் கழிக்கரைப்புலம்பல்.

திருச்செந்தூர் என்பது வரைபகவெறிந்த வென்றிவேற்கைக் குமரவேள் மகிழ்ந்தெழுந்தருளிய ஆறுபடைவீடுகளுள்ளே ஒன்று. திருச்செந்தூர், அலைவாய், முத்திக்ஷேத்திரம் முதலியன இத்தலத்திற் குரிய பேர்களாம். குமரவேள் செந்தமிழ்க் குருவாகவும் விளங்கினர். அகத்தியருக்குச் செந்தமிழ்மொழியைச் செவியறிவுறுத்தருளினர் என்ப. இன்னும், நக்கீரர், குமரகுருபரர், அருணகிரிநாதர், கச்சியப்ப முனிவர் முதலினோர் குகப்பெருமானுடைய திருவருள்பெற்ற பெரும் புலமையுடையோரேயாவர்.

திருச்செந்தூர்க் கழிக்கரைப்புலம்பல் என்பது தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர் அருளிச்செய்தது என்ப. இச் சுப்பிரமணிய முனிவர் சிவஞானமுனிவர் மாணவகர் பன்னிருவருள் ஒருவர் கலைசைச் சிலேடைவெண்பா, கலைசைக்கலம்பகம், சுப்பிரமணியர்விருத்தம், கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை முதலிய அருங்கவிநூல்களும் அப்பெரியார் கண்ட நூல்களேயாம்.

திருச்செந்தூர்க்கழிக்கரைப்புலம்பல் அச்சில்வரவில்லை. ஏட்டுப் பிரதிகளும் அகப்படவில்லை. ஏட்டுப்பிரதிகள் வைத்திருக்கும் அன்பர்கள் அவற்றை உதவுவார்களானால், அச்சிட்டு அதனை வெளியிடலாம்.

பழந்தமிழ்ப்பிரபந்தமாதலின் தமிழகத்தாருக்குக் கழிபேருவகைபயக்கும் நூலாக இது நின்று நிலவ ஏதுவாகும். திருச்செந்தூர்ப் பெரிய கட்டியம் சுப்பையரவர்கள் மனனஞ்செய்திருந்து கூறிய ஒருசெய்யுளை இங்கே தருகின்றோம்.

பருவந்தழைத்தவள்ளியையும்
பருவந்தழைத்தவள்ளியையும்
படைக்கணணிமானினைப்புணர்ந்தோன்
படைக்கணணிமானினைப்புணர்ந்தோன்
திருவார்சந்தவரையுடையான்
திருவார்சந்தவரையுடையான்
செந்திலகத்தானலைவாயான்
செந்திலகத்தானலைவாயான்
மருவிவருமம்பாறுகளே
மருவிவருமம்பாறுகளே
மணக்கேதகையேயிலையாயா
மணக்கேதகையேயிலையாயா
கருவண்டமரும்போந்துகளே
கருவண்டமரும்போந்துகளே
கழியாதரிக்குமிப்பீரே.
கழியாதரிக்குமிப்பீரே.

உம்பர் உவந்து அழைத்த—தேவர்கள் விரும்பியழைத்த. வள்ளியையும் படை—கூர்மை பொருந்திய வேல். சந்தவரை-கந்தமாதனமலை. செம்திலதம்—செம்மையான பொட்டு. அலைவு—துன்பம். பாறு—பருந்து. கேதகை—தாழை. கழி—கழிநிலம் (கடலோரத்து நிலம்). பீர்—பசப்பு. (துறை-மேனி பசப்புற்றமை தலைவர்க்குணர்த்தவேண்டல்).

திருத்தத்தையும், ஏட்டுப்பிரதியுடையார்தயவையும் பெறவேண்டியே இதனை வெளியிடமுன்னினும்.

வ. மு. இரத்தினேசுவரையர்.

—

# மதிப்புரை.

அனுமான்-இராமதூதன்:—இது திருவையாற்று வடமொழிக் கல்லூரித் தமிழ்விரிவுரையாளரான பண்டிதர் திரு L. உலகநாதபிள்ளையவர்களால் எழுதப்பெற்றது; அஞ்சனைசிறுவனுயவதரித்த அனுமானுடைய அரிய வீரச்செயல்களை உரியமுறையில் விளங்கக் கூறுவது. இராமாயண உத்தரகாண்டத்தி லுரைக்கப்பட்ட அனுமான்பிறப்பின் வரலாற்றைத் தோற்றுவாயாகக்கொண்டு, அவன் இராமபிரான்பொருட்டுத் தூதுசென்று சீதாபிராட்டியைக்கண்டு சூடாமணியை வாங்கிவந்து இராமனைத் திருவடிதொழுதநிறுதியாகவுள்ள கதைப்பகுதியை இன்பம் பயக்க எடுத்துரைக்கின்றது. மூழுமுதற்பரம்பொருளாகிய சிராமனுக்கு உற்றதுணையாயுதவிபுரிந்து தன் உயிர்வாழ்க்கைமுழுவதையும் அவன் பொருட்டே உரிமையாக்கிய மஹோபகாரியும் பக்திமானுமான மாருதியின்திவ்யசரிதத்தைச் செவிகளுக்கு நல்லுணவாகக்கொண்டு மகிழ்ச்சியுடன் போற்றாத மக்களும் உளரோ? நிற்க.

இவ்வுரைநூல் மிகவும் எளியசொற்றொடர்களானமைந்து, எதுகை மோனைத்தொடைகளுடன் செய்யுளின்பம் செறிந்து, தெள்ளிய தீந்தமிழ்நடையா வியன்று விளங்குகிறது. கம்பராமாயணத்தின்கருத்துக்களைப் பெரிதும் அடியொற்றிச்செல்வதோடு, அக்கவியரசரின் அரும் பெறல்மணிகளாம் இன்பப்பாடல்களை இதில் இடையிடையே எடுத்தாளும் திறமும் மிகுதியும் பாராட்டத்தக்கதே. இதுபோன்ற நூல்களை எத்தனையோ பலர் எழுதியிருப்பினும் அவற்றிற்கெல்லாம் இஃதோர் தனிநாயகமாம் தகுதிபெறுவதென்பது சொல்லாமலே விளங்கும். இளைஞர்களின்போதனுமுறையையனுசரித்து S. S. L. C. மாணவர்களுக்குத் துணைப்பாடமாதற்கு ஏற்றவாறு இந்நூல் எழுதப்பெற்றதாக வின கல்வியிலாகா அதிகாரிகளும் இதனை அங்கீகரித்தல் இன்றியமையாததாகும். நம்நாட்டு மக்களின்வாழ்க்கை சிறுவபதிலேயே செவ்வி பெறுதற்கு, இத்தகையவீரர்களின்சரிதங்களை அவர்கள் இளமையிலேயே கற்குமாறு விடுதல் மிக மிக வேண்டற்பாலதொன்றும். ஆகவே பிள்ளையவர்களாலெழுதப்பட்ட இச் சிறுநூலும் மாணவர்களுக்கு ஒரு பெரும்பேறெனறேமதித்தற்குரியது. இப்புத்தகம் தடித்தகாகிதத்தில் மிகவும் அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. இதன்விலை அணு 10. வேண்டுவோர் இதன் ஆசிரியரவர்களுக்கு எழுதிப் பெறலாம்.

---